# ஸ்ரீ ராமாநுஜன் — 234



சென்னை ஸத்க்ரந்த ப்ரகாசனஸபா மூலமாக மாதந்தோறும் வெளிவரும் பத்திரிகை.

ஆசிரியர்: **ஸ்ரீ காஞ்சி. P. B. அண்ணங்கராசாரியர்.**

| ஸம்புடம் **20** | கீலகஹு ஆனிமீ 1968 ஜூன்மீ வெளியீடு. | ஸஞ்சிகை **6** |
| --- | --- | --- |

## நூற்றெட்டுத் திருப்பதியந்தாதி—8

**போமானை யெய்து பொருமானைக் கொம்பொசித்து**
**ஆமானை மேய்த்துவந்த வம்மானைத்—தாமச்**
**செழுந்திருப் பேரானைத் திருமாலைச் சிந்தித்**
**தெழுந்திருப்பேற் குண்டோ விடர்.**

| | |
| --- | --- |
| போம் மானை எய்து | (பஞ்சவடியில்) துள்ளித் துள்ளி யோடின மாரீச மாயமானை அம்பெய்து கொன்றும் |
| பொரும் ஆனை கொம்பு ஒசித்து | (கம்ஸனரண்மனை வாசலில் போர் செய்யவந்த குவலயாபீட மதயானையின் கொம்புகளை முறித்து அதனை முடித்தும். |
| ஆம் ஆனை மேய்த்து | இட்டமான பசுக்களை மேய்த்தும் |
| உவந்த அம்மானை | திருவுள்ள முகந்த ஸ்வாமியாயும் |
| தாமம் செழும் திருப்பேரானை (செழுந்திருப் பேர்த்தாமத்தானை) | செழுமை தங்கிய திருப்பேர் நகரை இருப்பிடமாகவுடையனுயுமுள்ள பெருமானை |
| சிறு காலை சிந்தித்து எழுந் திருப்பேற்கு | சிற்றஞ் சிறுகாலையில் சிந்தித்துக்கொண்டே எழுந்திருக்குமெனக்கு |
| இடர் உண்டோ | எவ்விதமான துக்கமுமில்லையன்றோ. |

* * *—இரண்டாமடியில் **ஆனை**—ஆன்ஐ; **ஆன்**—பசுக்கள். இரண்டாமடியின் தனிச் சீரில் **தாம**மென்றது—வாஸஸ்தலமென்னும் பொருளதான வடசொல்; இதில்

'தா' என்னும் எழுத்து தவர்க்க சதுர்த்தம். இனி தவர்க்க த்ருதீயமென்றுங்கொள்ளலாம்; அப்போது, **தாமம்**-மாலைகளினால், **செழு**-அழகு வாய்ந்த, **பேரானை**-திருப்பேர் நகரிலுறையும் பெருமானை என்று பொருள் கொள்வது.

திருப்பேர் நகரானுக்கு அப்பக்குடத்தானென்று ப்ரஸித்தமான திருநாமம். அப்பத்திருப்பணியாரம் அமுது செய்வதில் அதிகமான அன்பு. ஆனது பற்றியே இங்குத் தினப்படியாக அப்பத்திருப்பணியாரம் விசேஷமாக அமுது செய்வித்தாகிறது. நம்மாழ்வாருடைய திருவாய்மொழியில் முடிவாக ஒரு பதிகம்பாடியநுபவிக்கப்பட்ட திவ்யதேசமிது. திருமங்கையாழ்வாரும் பதிகம் பாடியுள்ளார். ... ... ❋

# க்ரந்தமாலா கார்யாலயத்தின் அறிவிப்பு

நம்முடைய புத்தக ஜாபிதாவில் வெளியிட்ட புத்தகங்களில் ஒரு வருஷ காலமாகக் கிடைக்கமாட்டாத புத்தகங்களுக்குப் பலர் ஆர்டர் செய்து வருகிறார்கள். அன்னவர்கள் இதைக் கவனிக்கவேணும். **ஆசார்ய ஹ்ருதயஸாரம், ஆசார்ய ஹ்ருதயப்பதவுரை** என்கிற இரு நூல்களும் தற்காலம் கிடைக்க வழியில்லை. ஆசார்ய ஹ்ருதய மூலமும் இடையில் துர்லபமாயிருந்தது. அதை தமிழ், தெலுங்கு லிபிகளில் மறுபதிப்புச் செய்து வெளியிட்டிருக்கிறோம்.

திருவாய்மொழியின் திவ்யார்த்த தீபிகையுரையில் முதற்பத்தும் எட்டாம்பத்தும் மறுபதிப்பிலிருக்கின்றன. முடிவுபெறுவதற்குச் சில மாதங்களாகும். பெரிய திருமொழியின் முதலிரண்டு பத்துக்களுக்கும் திவ்யார்த்த தீபிகையுரையும் அப்படியே. திருக்குறுந் தாண்டகம், திருநெடுந்தாண்டகம் இவற்றின் தீபிகையுரை இடையில் இல்லையாயிருந்தது. அது மறுபதிப்பாகி பக்தர்களுக்குக் கிடைக்க ஸித்தமாயிருக்கின்றது.

ஸ்ரீமத் வரவரமுநீந்த்ர க்ரந்தமாலையில் இரண்டாவது ஸம்புடம்—பெரியாழ்வார் திருமொழி வியாக்கியானம். சென்ற மார்கழி தை மாதத்திலேயே அது ஸித்தமாகி வெளிவருவதாயிருந்தது; அப்படியே விளம்பரமும் செய்யப்பட்டிருந்தது. அசிந்திதமாய் தெய்விகமான இடையூறு விளைந்ததனால் பல அபேக்ஷகர்களுக்கு நாம் பதிலும் எழுதாமலிருந்துவிட்டோம். இப்போது இடையூறு நீங்கி விரைவாக அச்சாகிவருகிறது. இரண்டொரு மாதத்தில் ஸித்தமாகிவிடும்.

ஆந்திரபாஷா டீகையுடன்கூடிய திவ்யப்ரபந்தம்—பெரிய திருமொழியாயிரம் தவிர மற்ற மூவாயிரம் ஸித்தமாகியுள்ளது.

ஸம்ஸ்க்ருத ஹிந்தீ பாஷைகளிலான வியாக்கியானத்தோடுகூடிய திவ்யப்ரபந்தம்—முதலாயிரம் பூர்த்தியாகவும், பெரிய திருமொழியாயிரத்தில் நானூறு பாசுரங்களும், இயற்பாவில் திருவெழுகூற்றிருக்கை முதலாக ஸம்பூர்ணமாகவும், திருவாய்மொழியில் ஆறு பத்துக்கள் பூர்த்தியாகவும் ஸித்தமாகயுள்ளது.

இங்ஙனம்,

**க்ரந்தமாலா கார்யாலய நிர்வாஹகர்.**

# மணவாளமாமுனிகளின் ஸ்ரீஸூக்தி ஸுதாநிதியில் ஒருதிவலை.

ஸூக்தியென்றும் ஸ்ரீஸூக்தியென்றும் திவ்யஸூக்தியென்றும் திவ்யஸ்ரீஸூக்தி யென்றும் வழங்கத்தக்க பெருமை மணவாளமாமுனிகளின் அமுத வாக்குக்களுக்கே யொழிய வேறு எந்த ஆசிரியருடையவும் வாக்குக்கு அத்தகைய வ்யபதேசம் இணங்கா தென்பதை அடியேன் பலகாலும் பன்னிப்பன்னி விஜ்ஞாபித்திருப்பவனென்பதை ஸ்ரீவைஷ்ணவவுலகம் மறந்திராது. திருமழிசைப்பிரான் திருச்சந்தவிருத்தத்தில் *காணிலுமுருப்பொலார் செவிக்கினாத கீர்த்தியார்* என்றொரு பாசுரம் பாடியுள்ளார். அப்பாசுரத்தை நினைவூட்டவல்ல சில பிம்பங்களைக் கண்டு வெருவியிருப்பவர்கள் உள்ளங்குளிரக் கண்டு களிக்க இங்கே ஒரு திவ்யமங்கள விக்ரஹம் ஸேவை ஸாதித்தருளாநின்றது. அஸ்மத்குல கூடஸ்தரான ப்ரதிவாதி பயங்கரம் அண்ணா தாமருளிய வரவரமுநி சதகத்தில் *துக்தோதங்வத் தவளமதுரம் சுத்தஸத்வைக ரூபம் ரூபம் யஸ்ய ஸ்புடயதிதராம் யம் பணீந்த்ராவ தாரம்* என்றுள்ள சுலோகத்தில் "**சுத்தஸத்வைக ரூபம் ரூபம்**" என்னும்படியமைந்த திவ்ய ரூபத்தை இங்கே ஸேவித்துக் கண்குளிரப் பெறுமின்.



திருவயிந்திரபுரம்
மணவாளமாமுனிகள்

அந்த வரவரமுநிசதகத்திலேயே "ஸுராஹாரா ஸாரீகரணசணயத் ஸூக்திலஹரீ கரீயஸ்தாம் ஸ்தோதும் ப்ரபவதி ந வாசஸ்பதிரபி" என்றும், "த்ராக்ஷாமதிக்ஷிபதி நிந்ததி மாகரந்ததாராம் ஸுதாரஸஜரீம் அதரீகரோதி" என்றும் புகழப்பட்ட தத்திவ்ய ஸூக்திப் பெருமையை ஈண்டு சிறிது அநுபவிக்க விரும்புகிறோம். 'ஆச்சரியமான ஸ்ரீஸூக்தி' 'அத்புதமான திவ்யஸூக்தி' என்று வெறுமனே புகழ்வதனால் என்ன பயன்? அந்த ஆச்சர்ய—அத்புதத்தன்மைகளை யெடுத்து விளக்கி ஸஹ்ருதயர்களை உகப்பிப்பதன்றோ விவேகி க்ருத்யம். அங்ஙனே உகப்பிக்கிறோம். [இதற்கு ஸ்வல்ப அவதாரிகை.] ஸ்ரீராமாநுஜன் 229ல் ஸம்ப்ரதாய ஸாம்ராஜ்யம் என்கிற ஸ்வகீயக்ரந்தத்தை வெளியிடத் தொடங்கியிருப்பதை உலகம் மறந்திராது. ஸ்ரீ உவே. மதுராந்தகம் வீரராகவாசாரியர் ஸ்வாமியென்கிற வித்வான் எழுதி வெளியிட்டிருந்த 'ஸம்ப்ரதாயஸுதா' என்கிற சுவடிக்கு ப்ரத்யக்ஷர கண்டனமாகத் தோன்றிய நூல் அது—என்பதையும் மறந்திருக்க மாட்டீர்கள். அதில் பக்கம் 28ல் இருபதாவது வாக்யச்ரேணி முதல் நான்கு வாக்யச்ரேணிகள் பிரசுரமாகியிருப்பதை இங்கு முன்னம் எடுத்துக் காட்டி, "விசதவாக்சிகாமணி வாக்வைசத்ய ப்ரஸ்தாவம்" என்று ப்ரஸ்தாவ மாத்ரத்தில் அங்கு நிறுத்தியிருப்பதை விசதமாக விளக்குவேனிங்கு.

மதுராந்தக வித்வான் தமது சுவடியில் ''இவர்களுக்கு சாரீரகார்த்த நிர்ணயமில்லையன்றோ'' என்று நிரூபணலேசமுமில்லாமல் ஒருவரியெழுதிவைத்தார். இதில் 'இவர்களுக்கு' என்றது தென்னுசார்ய ஸம்ப்ரதாயஸ்தர்களுக்கு என்றதாக அவர்க்கு விவக்ஷிதம். அந்த தாரித்ரியம் உண்மையில் இன்னுருக்கென்பதை விவரிக்க வேண்டி வந்தபடியால் அதை அவிசால்யமாக விவரித்துக் காட்டினேன்.

அதை ஈண்டு அநுவதிக்கிறேன்;—

**''இவர்களுக்கு சாரீரகார்த்த நிர்ணயமில்லையன்றோ''** என்கிருரிவர் நாலாம் பக்கத்தலைப்பில். ஒரு ஜந்து சொல்லிற்றும்—''பிறந்தால் ஸர்வாங்கஸுந்தரமாகவன்றோ பிறக்கவேணும்; புஜித்தால் தேனும் பாலும் நெய்யும் கன்னலுமமுதுமன்றோ புஜிக்க வேணும்'' என்றதாம். அது எந்த ஜந்துவென்னில், ரஹஸ்யத்ரய ஸாராவஸானத்தில் *கலகண்டகணுஸ்வாத்யே* என்கிற சுலோகத்தில் மூன்ருவது பாதத்திலே ஸ்வாமியின் மங்களாசாஸனம்பெற்ற ஜந்து. அது, தன்னை ஸர்வாங்கஸுந்தரமாகவும் மதுர பக்ஷியாகவும் நினைத்திருக்கையாலே அங்ஙனே சொல்லுமாம். சாரீரகார்த்த நிர்ணயம் இவர் எவ்வளவு பெற்றிருக்கிருரென்பதையும், இவருடைய மூலபுருஷர்கள் எவ்வளவு பெற்றிருந்தார்களென்பதையும் நம்முடைய நூல்களில் ஏதேனுமொன்றை வாசித்தவரும் எளிதினுணர்வர். இந்த ஸுதாசுவடியொன்று போதுமே யுணரவோ உணர்த்தவோ. *யதிஹாஸ்தி ததந்யத்ர யந்நேஹாஸ்தி ந தத் க்வசித்* என்னும்படியாகத் தோன்றுமிந்த ஸாம்ராஜ்ய க்ரந்தத்தில் எந்த நிரூபணமும் விடுபடக்கூடாதாகையாலே இதையும் நன்கு நிரூபிப்போம். ஸாதாரணவ்யுத்பத்தியிலும் முழுமோசமென்று கீழே நிரூபிக்கப் பெற்றவிவர்க்கு ஸ்ரீ பாஷ்யத்தில் எவ்வளவு ப்ரவேசமென்று நாம் விசாரிக்கப் புகுவது மிகவும் அபஹாஸ்யமாகும். இவரை விட்டிடுவோம். *மஹாகஜா: பலாயந்தே மசகா நாம் து கா கதி:* என்பர் திருமஞ்சனம் ஸ்வாமி.

சாரீரகமீமாம்ஸையில் கர்த்ரதிகரணமும் பராயத்தா திகரணமும் சேர்ந்தாப் போலிருக்கிறது. முந்தின அதிகரணம் ஜீவாத்மாவைக் கர்த்தாவென்று நிலையிட்டது. பிந்தின அதிகரணம் அந்த கர்த்ருத்வம் பரமாத்மாயத்தமென்று அறுதியிட்டது. *ய ஆத்மநி திஷ்டந் ஆத்மநோந்தர: ஆத்மாந மந்தரோ யமயதி* *அந்த: ப்ரவிஷ்டச் சாஸ்தா ஜநாநாம் ஸர்வாத்மா* இத்யாதி ச்ருதிகளில் பரமாத்மாவானவன் ஜீவாத்மாவை அவ்வோகருமங்களில் ப்ரேரிப்பவனுகத் தெரியவருவதால் ஜீவாத்மாவுக்குச் சொன்ன கர்த்ருத்வம் பரமாத்மாவின் ப்ரேரணுதீனமென்று ஸித்தாந்திதமாயிற்று. இங்ஙனே கொண்டால் [ஜீவாத்மாவின் கர்த்ருத்வம் பரமாத்மாதீனமென்றுகொண்டால்] விதிநிஷேத சாஸ்த்ரங்கள் வ்யர்த்தமாக வேண்டிவருமே; நிக்ரஹாநுக்ரஹங்கள் ஜீவாத்மாவுக்கு இல்லையாகுமே! என்கிற ஆசங்கை நிற்கிறது. இதைப் பரிஹரிக்க *க்ருதப்ரயத்நாபேக்ஷஸ் து விஹிதப்ரதிஷித்த அவையர்த்த்யாதிப்ய:* என்று அடுத்த ஸூத்ரமவதரித்தது. ப்ரதம ப்ரவ்ருத்தியில் ஜீவாத்மாவுக்கு ஸ்வாதந்த்ர்யமும் த்விதீயாதி ப்ரவ்ருத்திகளில் மட்டுமே பரமாத்ம பாரதந்த்ர்யமும் கொள்ளப்படுகையாலே விதிநிஷேத சாஸ்த்ரங்களுக்கு வையர்த்த்யமில்லையென்று சங்காபரிஹாரம் செய்ததாயிற்று. ஆக சாரீரகமீமாம்ஸா

நிஷ்கர்ஷம் எத்தகைத்தாக முடிந்ததென்னில்; பரமாத்மாவுக்கு **ஸாக்ஷித்வம்** **அநுமந்த்ருத்வம்** ப்ரேரகத்வம் என மூன்றுகாரங்களுண்டு. ஸாக்ஷித்வமென்பது **உதாஸீநத்வம்**. ஜீவனுடைய ப்ரதம ப்ரவ்ருத்தியில் ஈச்வரனுக்கு ஔதாஸீந்யமே யுள்ளது. த்விதீயாதி ப்ரவ்ருத்திகளில் அநுமந்த்ருத்வம். (அஃதில்லையாகில் ஜீவனுக்கு ப்ரவ்ருத்தியே நிர்வஹிக்கமாட்டாதன்றே.) இனி ப்ரேரகத்வம் எந்த ஸ்தலத்திலென்றால், இதை நம் ஸ்ரீ பாஷ்யகாரர் *க்ருதப்ரயத்நாபேக்ஷஸ் து* இத்யாதி ஸூத்ரபாஷ்யத்தில்—"நந்வேவம் *ஏஷஹ்யேவ ஸாது கர்ம காரயதி .....'' இத்யாதி ஸ்ரீஸூக்திகளால் ஒருங்க விட்டு ஸர்வஸாதாரணமன்றிக்கே விசேஷ விஷயமென்று நிர்வஹித்தருளினார். இந்த நிர்வாஹம் அநகமும் அநர்க்கமுமானது.

ஆக ஜீவனுடைய ப்ரவ்ருத்திகளில் ப்ரதம ப்ரவ்ருத்தியில் (**ஈச்வரனுக்கு**) ஔதாஸீந்யமென்றும் த்விதீயாதி ப்ரவ்ருத்திகளில் அநுமந்த்ருத்வமென்றும் தேறுகின்றது. இதை நடாதூரம்மாள் தத்வஸாரத்தில் ***ஆதாவீச்வர தத்தயைவ புருஷ: ஸ்வாதந்த்ர்ய** சக்த்யா ஸ்வயம் .....தத்ரோபேக்ஷ்ய ததோநுமத்ய......* இத்யாதி ச்லோகத்தாலே நன்கு விளங்கவைத்தார். விஷயதத்வமிங்ஙனேயிருக்க *அங்யேந்த்ரகம் புவநமந்யதநிந்த்ரகம் **வா** **கர்த்தும்** க்ஷமே **கவிரபூத்** அயமந்வவாயே* என்று பேசிக்கொண்ட குருஸார்வபௌமர் அதிகரண ஸாராவளியில் பராயத்தாதிகரணார்த்த நிர்வாஹத்தில் (ச்லோ. 242) ***க்ஷேத்ரஜ்ஞாநாம் ஸமாநா** மித்யாதியில் சேதநனுடைய ஸகல ப்ரவ்ருத்திகளிலும் ஈச்வரனுக்கு ப்ரேரகத்வம் தாராளமாக வுண்டென்று கூறி, இது ஸ்ரீ பாஷ்ய தீப-ஸார-தத்வஸாரங்களோடு விரோதிக்குமது என்பதைத் தாமே தெரிந்துகொண்டு ***பாஷ்யாதி க்ரந்தலேசோபி** **அவஹித மநஸாம் ஐதமர்த்த்யம் பஜேத*** என்று ஓங்கியடித்துவிட்டார்; ஸ்ரீபாஷ்யாதிகளை நுட்பமாக ஊன்றி நோக்கினால் அவற்றுக்கு இதுவே அர்த்தமென்று தேறலாம் போ— என்று முடித்திட்டார். ஸ்ரீ பாஷ்யாதிகளுக்கு இது கண்டனமேயொழிய இவர் கூறுமர்த்தம் அவற்றில் காணமுடியாதென்பது கல்வெட்டு. "லவணம் என்பதற்கு எருமைச்சாணி யென்றுதான் பொருள்; இப்பொருளை மனத்திற்கொண்டு கோசங்களை ஆழ்ந்து நோக்கினால் இப்பொருள் கிடைத்தே தீரும்'' என்பதோடொக்குமிது. அவஹித மநஸாம் ஐதமர்த்த்யம் பஜிக்கும்படியான பாஷ்ய க்ரந்த லேசம் எது? 'எடுத்துக்காட்டும்' என்றால் திசைதொறும் விழிக்கவேணுமத்தனை. ஆதிசப்தத்தை விட்டிடுவோம்; பாஷ்ய க்ரந்த லேசம் காட்டினால் போதும். வளவள வழவழவென்று எதையேனும் பேசாதே எழுதாதே ச்ருங்க க்ராஹிகயா பாஷ்ய க்ரந்த லேசமே காட்டி நிற்கவேணும்.

தத்வத்ரயத்தில் (35.) **"கர்த்ருத்வந்தானீச்வராதீநம"** என்கிற சூர்ணையின் வியாக்கியானத்தில் விசதவாக்சிகாமணிகள் ஸ்ரீ பாஷ்யாதிபஹு ஸ்ரீஸூக்திகளை வெகு விரிவாக எடுத்துக்காட்டி ஸமந்வயம் செய்தருளியிருக்கும் பரிசைக்காணக் கண்ணில்லையே யிவர்களுக்கு. மாககாவியம் இரண்டாவது ஸர்க்கத்தில் *அங்காதிரோபித ம்ருகச் சந்த்ரமா ம்ருகலாஞ்சந:, கேஸரீ நிஷ்டுரக்ஷிப்தம்ருகயூதோ ம்ருகாதிப:* என்றுள்ள ச்லோகத்தையே இவர்கள் நிச்சலும் சிந்தைசெய்யத்தகும். ஸ்ரீ பாஷ்யம் பட்டபாடு இது; கீதாபாஷ்யம் பட்டபாடும் சிறிது கேட்கலாமோ?... ஆக இதுவரையில் அஸ்மதீய ஸம்ப்ரதாய ஸாம்ராஜ்ய வாக்யச்ரேணிகளின் அநுவாதம். அநூதிதவாக்யங்களின் முடிவில் மணவாள மாமுனிகளின் வியாக்கியான ஸ்ரீஸூக்திகளின் ப்ரஸ்தாவமாத்ரம் செய்தோமத்தனை

யொழிய விஸ்தரபயத்தாலே அந்த திவ்ய ஸ்ரீஸூக்திகளை யெடுத்துக்காட்டிற்றிலோம். பிறகு சிலபல விவேகிகள் தங்களிடம் மாமுனிகளின் தத்வத்ரய வியாக்கியான ஸ்ரீகோச மில்லாமையைத் தெரிவித்து வருவித்துக்கொண்டு ஸேவித்து த்ருப்தரானார்கள். அந்த ஸ்ரீகோசம் ஸ்ரீமத் வரவரமுநீந்த்ர க்ரந்தமாலா ப்ரதம ஸம்புடத்திற் சேர்ந்திருப்பதனால் அனைவர்க்கும் எளிதாவதில்லையாதலால் பலருடைய குறைதீர அந்த ஸ்ரீஸூக்தி கண்டங்கள் இங்கு (இதன் கீழே) பிரசுரிக்கப்படுகின்றன.

**தத்வத்ரய வ்யாக்க்யான ஸ்ரீஸூக்திகள் வருமாறு:—**

*பராத்து தச்ச்ருதே:* என்னும் வேதாந்த ஸூத்ரத்தாலே, ஆத்மாவினுடைய கர்த்ருத்வம் பராயத்தமென்று ஸித்தமாகச் சொல்லப்பட்டதிறே. சாஸ்த்ரார்த்தவத்த்வத்துக்காக கர்த்ருத்வம் ஆத்ம தர்மமென்று கொள்ளவேணும். அந்த கர்த்தாவுக்கு தர்மமான ஜ்ஞாந இச்சா ப்ரயத்நங்கள் பகவத் அதீநங்களா யிருக்கையாலும், அந்த ஜ்ஞாநாதிகள் பகவத் அநுமதியொழிய க்ரியாஹேதுவாக மாட்டாமையாலும், இவனுடைய கர்த்ருத்வம் ஈச்வராதீநம் என்கிறது. இவனுடைய புத்தி மூலமான ப்ரயத்நத்தை அபேக்ஷித்து ஈச்வரன் அநுமதிதாநம் பண்ணுகையாலே, அந்த க்ரியா நிபந்தநமான புண்யபாபங்களும், சேதநனுக்கே ஆகிறது. இப்படி கர்த்ருத்வம் பரமாத்மாயத்தமானாலும் விதி நிஷேத வாக்யங்களுக்கும் வையர்த்த்யம் வாராது; *க்ருதப்ரயத்நாபேக்ஷஸ்து விஹிதப்ரதிஷித்த—அவையர்த்த்யாதிப்ய:* என்று பரிஹரிக்கப்படுகையாலே. அதாவது—விஹிதப்ரதிஷித்தங்களுக்கு வையர்த்த்யாதிகள் வாராமைக்காக, இச்சேதநன் பண்ணின ப்ரதம ப்ரயத்நத்தை அபேக்ஷித்துக்கொண்டு ஈச்வரன் ப்ரவர்த்திப்பிக்குமென்றபடி. எங்ஙனேயென்னில்; எல்லா சேதநருக்கும் ஜ்ஞாத்ருத்வம் ஸ்வபாவமாகையாலே, ஸாமாந்யேந ப்ரவ்ருத்தி நிவ்ருத்தி யோக்யத்வமுண்டாயேயிருக்கும்; இப்படியான ஸ்வரூபத்தை நிர்வஹிக்கைக்காக, ஈச்வரன் அந்தராத்மாவாய்க்கொண்டு நில்லா நிற்கும்; அவனாலே உண்டாக்கப்பட்ட ஸ்வரூபசக்தியை உடையனான சேதநன், அவ்வோ பதார்த்தங்களிலே உத்பந்ந ஜ்ஞாந சிகீர்ஷா ப்ரயத்நனாய்க்கொண்டு வர்த்தியா நிற்கும்; அவ்விடத்தில் மத்யஸ்தனாகையாலே உதாஸீநரைப்போலே யிருக்கிற பரமாத்மாவானவன் அந்த சேதநனுடைய பூர்வ வாஸநாநுரூபமான விதி நிஷேத ப்ரவ்ருத்தியிலே அநுமதியையும் அநாதரத்தையும் உடையவனாய்க்கொண்டு, விஹிதங்களிலே அநுக்ரஹத்தையும் நிஷித்தங்களிலே நிக்ரஹத்தையும் பண்ணாநிற்பானாய், அநுக்ரஹாத்மகமான புண்யத்துக்கு பலமான ஸுகத்தையும் நிக்ரஹாத்மகமான பாபத்துக்கு பலமான துக்கத்தையும் அவ்வோ சேதநர்க்குக் கொடா நிற்கும். இது தன்னை அபியுக்தரும் சொன்னார். *ஆதாவீச்வர தத்தயைவ புருஷஸ்ஸ்வாதந்த்ர்யசக்த்யா ஸ்வயம் தத்தத்ஜ்ஞாநசிகீர்ஷணப்ரயதநாந்யுத்பாதயந் வர்த்ததே, தத்ரோபேக்ஷ்ய ததோநுமத்ய விதத‌த் தந்நிக்ரஹாநுக்ரஹௌ தத்தத்கர்மபலம் ப்ரயச்சதி ததஸ் ஸர்வஸ்ய பும்ஸோ ஹரி:* என்று— அடியிலே, ஸர்வநியந்தாவாய் ஸர்வாந்தராத்மாவான ஸர்வேச்வரன், தனக்குண்டாக்கிக்கொடுத்த ஜ்ஞாத்ருத்வரூபமான ஸ்வாதந்த்ரிய சக்தியாலே இப்புருஷன் தானே அவ்வோ விஷயங்களிலே ஜ்ஞாந சிகீர்ஷாப்ரயத்நங்களை யுண்டாக்கிக்கொண்டு வர்த்தியாநிற்கும்; அவ்விடத்தில் அசாஸ்த்ரீயங்களிலே உபேக்ஷித்தும், சாஸ்த்ரீயங்களிலே அநுமதி பண்ணியும், அவ்வோ விஷயங்களிலே நிக்ரஹாநுக்ரஹங்களைப் பண்ணாநின்றுகொண்டு, அவ்வோ கர்மபலத்தையும்

ஸர்வேச்வரன் கொடா நிற்குமென்றூர்கள். இப்படி ஸர்வப்ரவ்ருத்திகளிலும் சேதநனுடைய ப்ரதமப்ரயத்நத்தை அபேக்ஷித்துக்கொண்டு பரமாத்மா ப்ரவர்த்திப்பியா நிற்குமென்றதாய்த்து.

ஆனால், *ஏஷ ஹ்யேவ ஸாது கர்ம காரயதி, தம் யமேப்யோ லோகேப்ய உந்நிநீஷதி, ஏஷ ஏவாஸாது கர்ம காரயதி, தம் யமதோ நிநீஷதி* என்று, உந்நிநீஷையாலும், அதோநிநீஷையாலும், ஸர்வேச்வரன் தானே ஸாத்வஸாது கர்மங்களைப் பண்ணுவியா நிற்குமென்கிற இது சேரும்படி என்? என்னில்; இது ஸர்வஸாதாரணமன்று, யாவனொருவன் பகவத் விஷயத்தில் அதிமாத்ரமான ஆநுகூல்யத்திலே வ்யவஸிதனுய்க்கொண்டு ப்ரவர்த்தியா நிற்கும்; அவனை அநுக்ரஹியா நின்றுகொண்டு, பகவான் தானே ஸ்வப்ராப்த்யுபாயங்களாய், அதிகல்யாணங்களான கர்மங்களிலே ருசியை ஜநிப்பிக்கும், யாவனொருவன் அதிமாத்ர ப்ராதிகூல்யத்திலே வ்யவஸிதனுய்க்கொண்டு ப்ரவர்த்தியா நிற்கும்; அவனை ஸ்வப்ராப்தி விரோதிகளாய், அதோகதி ஸாதநங்களான கர்மங்களிலே ஸங்கிப்பிக்கும் என்று, இந்த ச்ருதிவாக்யங்களுக்கு அர்த்தமாகையாலே. இது தன்னை ஸர்வேச்வரன் தானே அருளிச்செய்தானிறே, *அஹம் ஸர்வஸ்ய ப்ரபவோ மத்தஸ்ஸர்வம் ப்ரவர்த்ததே, இதி மத்வா பஜந்தே மாம் புதா பாவஸமந்விதா;* என்று தொடங்கி *தேஷாம் ஸததயுக்தாநாம் பஜதாம் ப்ரீதிபூர்வகம், ததாமி புத்தியோகம் தம் யேந மாமுபயாந்தி தே. தேஷாமேவாநுகம்பார்த்தம் அஹமஜ்ஞாநஜம் தம:, நாசயாம் யாத்மபாவஸ்த்தோ ஜ்ஞாநதீபேந பாஸ்வதா* என்றும், *அஸத்யமப்ரதிஷ்டம் தே ஜகதாஹுரநீச்வரம்* என்று தொடங்கி, *மாமாத்மபரதேஹேஷு ப்ரத்விஷந்தோப்யஸூயகா:* என்னுமதளவாக அவர்களுடைய ப்ராதிகூல்யாதிசயத்தைச் சொல்லி, *தாநஹம் த்விஷத: க்ரூராந் ஸம்ஸாரேஷு நராதமாந், க்ஷிபாம்யஜஸ்ரமசுபா நாஸுரீஷ்வேவ யோநிஷு* என்றும் அருளிச் செய்கையாலே. ஆகையால், அநுமந்த்ருத்வமே ஸர்வஸாதாரணம்; ப்ரயோஜகத்வம் விசேஷ விஷயமென்று கொள்ளவேணும். *க்ருதப்ரயத்நாபேக்ஷஸ்து* என்கிற ஸூத்ரத்திலே இதெல்லாம் பாஷ்யகாரர் தாமே அருளிச்செய்தார். இவை எல்லாவற்றையும் திருவுள்ளம்பற்றியிறே (கர்த்ருத்வம் தான் ஈச்வராதீநம்) என்று அருளிச்செய்தது.

ஆக, கீழ்ச் செய்ததாயிற்று—*ஜ்ஞாநாச்ரய மாகையாவது—ஜ்ஞாநத்துக்கு இருப்பிடமாயிருக்கை* என்று ப்ரதமத்திலே ஆத்மாவினுடைய ஜ்ஞாத்ருத்வத்தைச் சொல்லி, ஜ்ஞாந மாத்ரமென்பாரை நிராகரித்துக்கொண்டு, ஜ்ஞாத்ருத்வ கதநாநந்தரம் கர்த்ருத்வ போக்த்ருத்வங்கள் சொல்லவேண்டுகையாலே அவை இரண்டும் ஜ்ஞாத்ருத்வ பலத்தாலே தன்னடையே வருமென்னுமிடத்தை தர்சிப்பித்து, குணங்களுக்கே கர்த்ருத்வமுள்ளது; ஆத்மாவுக்கு இல்லை என்பாரை நிராகரித்துக்கொண்டு, ஆத்மாவினுடைய கர்த்ருத்வத்தை ஸ்தாபித்து, அந்த கர்த்ருத்வத்தில் ஸ்வரூபப்ரயுக்தமல்லாத அம்சத்தையும், அதுதானிவனுக்கு வருகைக்கடியையும் சொல்லி, இப்படி ஆத்மாவுக்குண்டான கர்த்ருத்வம்தான் ஸர்வாவஸ்தையிலும் ஈச்வராதீநமாயிருக்குமென்று நிகமித்தாராயிற்று.

ஆக இவ்வளவும் தத்வத்ரய வியாக்கியானத்தில் மாமுனிகளின் திவ்யஸூக்திகள். இத்யலம். ... ... ... ... ... ✽



ப்லவங்க மீனவிசாக கோஷ்டிகளின் காட்சிகள்.











ஸ்ரீமத் பரமஹம்ஸ. திருப்பதி சின்ன ஜீயர் ஸ்வாமியும் ஸ்ரீ காஞ்சீ அழகிய மணவாள ராமாநுஜ யதீந்த்ரப்ரவண ஜீயர் ஸ்வாமியும் ஸேவை ஸாதிக்கிறார்கள்.

# ஒரு பழைய விருத்தாந்தம்—தன் சரிதையிலிருந்து.

காஞ்சீபுரியில் ஸ்ரீமத் அய்யாக்ருஷ்ணஸாமி தாதாசார்யரென்பவரைப் பலருமறிவர். அவர் ஸம்ப்ரதாய நிஷ்ணுதர். அவர் ஒரு சமயம் கூரத்தாழ்வான் திருநக்ஷத்திரோத்ஸவம் ஸேவிக்க கூரம் சென்றிருந்தார். அங்கே பல ப்ரகரணங்களில் அநுஸந்திக்கிற தனியன் ஒன்றுண்டு; அதாவது, *அர்வாஞ்சோ யத்பதஸரஸிஜத்வந்த்வமாச்ரித்ய பூர்வே மூர்த்நா யஸ்யாந்வயமுபகதா தேசிகா முக்திமாபு:, ஸோயம் ராமாநுஜமுநிரபி ஸ்வீயமுக்திம் கரஸ்தாம் யத்ஸம்பந்தாதமநுத கதம் வர்ண்யதே கூரநாத:* என்பது: இது பட்டர் அருளிச்செய்ததாக ஸம்ப்ரஸித்தம். இதில், எம்பெருமானாருடைய திருமுடி ஸம்பந்தத்தினால் முற்பட்ட ஆசாரியர்கள் உஜ்ஜீவித்ததாகவும், பிற்பட்ட ஆசார்யர்கள் அவருடைய திருவடி ஸம்பந்தத்தினால் உஜ்ஜீவித்துக் கொண்டிருப்பதாகவும் கூறப்பட்டிருக்கிறது. இதைக்கேட்ட அய்யாதாதாசாரியர் "இதெல்லாம் தப்பான ஐதிஹ்யத்தைக் கொண்டு கல்பிக்கப்படுகிற ச்லோகம்; பிற்பட்டவர்களுக்கு ஸ்வாமியின் திருவடி ஸம்பந்தத்தினால் மோக்ஷமென்றால் இது பொருந்தும்; முற்பட்டவர்களுக்குத் திருமுடி ஸம்பந்தத்தினால் மோக்ஷ முண்டாயிற்றென்றால் இது அநங்விதமான வார்த்தையல்லவா? இது எப்படி பொருந்தும்? ஸ்ரீமந்நாதமுனிகள் உய்யக்கொண்டார் மணக்கால்நம்பி போல்வார்தானே ஸ்வாமிக்கு முற்பட்டவர்கள்; அவர்கள் என்றைக்கோ பரமபதம் போய்ச் சேர்ந்தவர்களன்றோ; அவர்களது காலத்தில் ஸ்வாமி யெம்பெருமானார் அவதரித்திருந்தாலன்றோ இவருடைய திருமுடி ஸம்பந்தம் அவர்களுக்கு நேர்ந்ததென்று சொல்ல இடமுண்டு. இவருடைய அவதாரமே நடந்திலாத ஸமயத்தில் இவருடைய திருமுடி ஸம்பந்தம் அவர்களுக்கு எப்படி ப்ராப்தமாகக் கூடும்? இது ஸர்வாத்மநா அஸம்பாவிதமான வார்த்தை" என்று உபந்யஸித்து அங்குள்ள யதாச்ருதக்ராஹிகளான ஸ்ரீவைஷ்ணவர்களின் மனத்தை அதிமாத்ரம் குழப்பி விட்டார். இச்செய்தி அடியேனுக்குத் தெரியவந்து உடனே அன்றிரவு மஹோத்ஸவத்திற்கு அங்கே சென்று உபந்யாஸ கோஷ்டியைச் சேர்த்து அந்த அய்யா க்ருஷ்ணதாதாசார்யருக்கு வெகு தத்துவங்களையுணர்த்தினேன். அதைச் சிறிது விவரிக்கிறேன்:—

தேசிகன் ந்யாய பரிசுத்தியின் தொடக்கத்தில் எம்பெருமானாரைப்பற்றிப் பணித்த மங்கள ச்லோகத்தில்—*பத்யுஸ் ஸம்யமிநாம் ப்ரணம்ய சரணௌ தத்பாதகோடீரயோஸ் ஸம்பந்தேந ஸமித்யமாநவிபவாந் தந்யாந் ததாந்யாந் குரூந்* என்றுள்ளது. இதன் பொருளாவது, ஸம்யமிநாம் பத்யு: சரணௌ ப்ரணம்ய—; தத் பாதகோடீரயோ: ஸம்பந்தேந—அந்த எம்பெருமானாருடைய திருவடியென்ன திருமுடியென்ன இவற்றினுடைய ஸம்பந்தத்தினால், ஸமித்யமாநவிபவாந்—பெருமைபெற்றவர்களாய், தந்யாந்—க்ருதார்த்தர்களான, குரூந் ப்ரணம்ய—ஆசாரியர்களை வணங்கியும் .....ந்யாயபரிசுத்தி யென்கிற இந்த க்ரந்தம் செய்யப்படுகிறது என்கை. இதில் "தத் பாத கோடீரயோஸ் ஸம்பந்தேந" என்றது உயிரான வார்த்தை. கோடீரமென்று திருமுடிக்குப் பெயர். பிற்பட்டவர்களுக்குத் திருவடி ஸம்பந்தம் போல முற்பட்டவர்களுக்குத் திருமுடி ஸம்பந்தம் உத்தாரகமென்று இதனால் நன்கு காட்டப்பட்டதாயிற்று. இந்த ச்லோகமானது "அர்வாஞ்சோ யத்பதஸரஸிஜ த்வந்த்வமாச்ரித்ய" என்கிற ஆழ்வான் தனியனை

யடியொற்றியே தேசிகன் பணித்தது. *யச்சோபயோஸ் ஸமோ தோஷ: பரிஹாரோபி வா ஸம:* இத்யாதி. என்று பரக்கவுபந்ய ஸித்தேன். அவர் இவை முழுவதும் கேட்டு இதற்குமேல் ஒன்றும் சொல்ல வழியில்லாமையாலே 'இப்படியன்றோ விஷயஞ் சொல்ல வேணும்' என்று கொண்டாடிவிட்டு அப்போது ஸாரமாகவும் ரஸமாகவும் சில வார்த்தை சொன்னார்; "ஒரு க்ஷணத்தில் தேசிகனுடைய ஸ்ரீஸூக்தியைக் கொண்டே என்னை வாய்மாளப் பண்ணின ஏற்றம் இந்த அண்ணா ஸ்வாமி யொருவர்க்குத்தான் ஏற்கும். மற்ற பேர்கள் ஏதாவது கதை சொல்லிக்கொண்டிருப்பார்களே யொழிய இப்படி ச்ருங்க க்ராஹிகயா ப்ரமாணமெடுத்துக்காட்ட, அதிலும் தேசிக ஸூக்தியையே யெடுத்துக்காட்ட சக்தரல்லர். எங்களுடையவர்கள் எதையும் ஆழ்ந்து பாராமல் *விததைதிஹ்யஸஹஸ்ரவர்ணநை* என்று உபாலம்பம் செய்து போனார்கள். வாயெடுத்ததற்கெல்லாம் பின்புள்ளாரான எங்கடவர்கள் அதையே சொல்லிவருகிறார்கள். நானும் தப்பான ஐதிஹ்யமென்றே கருதிப் பல பேசிவிட்டேன், ஆழ்வான் க்ஷமித்தருள வேணும்" என்று. ... ... ... ❀

## துஷ்டர்களுக்கு தர்மருசியுண்டானால் சிஷ்டர்களுக்கு அனர்த்தமாகும்.

மஹான்கள் சொல்லிவரும் அருமை பெருமை வாய்ந்த சுலோகங்களுள் "அஸதாம் தர்மபுத்திச் சேத் ஸதாம் ஸந்தாப காரணம், உபோஷிதஸ்ய வ்யாக்ரஸ்ய பாரணம் பசு மாரணம்" என்கிற சுலோகம் ப்ரக்ருதத்தில் நமக்கு நினைவுவருகின்றது. இந்த சுலோகத்தின் கருத்து என்ன வென்றால்; தருமம் செய்ய எல்லாரும் கடமைப் பட்டவர்களே; அவசியம் செய்யவேண்டியதுதான். ஆனால் அஸத்துக்கள் தரும காரியம் செய்யக்கிளர்ந்தால் அது ஸத்துக்களுக்கு ஸந்தாப ஹேதுவாகியே நிற்கும். [இதற்கு ஒரு நிதர்சனங் கேளுங்கள்.] ஒரு புலி இன்று ஏகாதசியானகயாலே இன்று முழுதும் உபவாஸமிருக்கப் போகிறேனென்றதாம்; மறுநாளும் இன்று ச்ரவணத்வாதசியாகையாலே இன்றைக்கும் உபவாஸம் என்றதாம். உபவாஸம் முடிந்தபின் பாரணை பண்ணவேணுமே. இந்தப் புலிக்கு எவ்விதமான பாரணையென்றால் **[உபோஷிதஸ்ய வ்யாக்ரஸ்ய பாரணம் பசுமாரணம்.]** இதை நாம் விவரிக்கவேணுமோ? அஜாத சத்ருக்களான ஜந்துக்களை அடித்துக் கொன்று விழுங்குவதுதான் அதற்குப் பாரணை.

"தர்மஸம்ஸ்தாபநார்த்தாய ஸம்பவாமி" என்று ப்ரதிஜ்ஞை செய்து தர்மஸ்தாபனார்த்தமாகவே திருவவதரித்தருளாநின்ற எம்பெருமான் தருமகாரியங்களைக் குலைக்க ஓர் அவதாரமெடுத்ததாகக் கேள்விப்படுகிறோம். அஃது அவன் செய்யக்கூடியதா? என்று கேள்வி வந்தால், அஸத்துக்கள் செய்யும் தருமகாரியங்கள் ஸத்துக்களுக்கு அனர்த்தாவஹமாகுமென்பது பற்றியே தர்மச்ரத்தையைக் குலைக்கிறானென்று ஸமாதானங் கூறும் பெரியார்கள் மேலேயெடுத்துக் காட்டின சுலோகத்தையே கொண்டு உபபாதிக்கிறார்கள். இதற்குச் சார்பாக அடுத்த கட்டுரை கவனிக்கத் தக்கது—*கள்ளவேடத்தைக் கொண்டு போய்* இத்யாதி. ... ... ... ❀

## "கள்ளவேடத்தைக் கொண்டுபோய்ப் புரம்புக்கவாறும்"

திருவாய்மொழி ஐந்தாம்பத்தில் பத்தாம் பதிகத்தில் நான்காவது பாட்டின் தொடக்கமிது. இதில் முன்னடிகளில் புத்தாவதார கதை கூறப்படுகின்றது. காட்டுக் கெழுந்தருளின சக்ரவர்த்தி திருமகனுரை மீண்டும் திருவயோத்திக்கு எழுந்தருளப் பண்ணிக்கொண்டு வருவதற்காகச் சித்திரகூடஞ்சென்ற பரதாழ்வாேைடு உடன் சென்றவர்களில் ஜாபாலியென்ற ப்ராஹ்மணேத்தமரும் ஒருவரென்பது தெரிந்ததே. அந்த ஜாபாலியானவர் பரதாழ்வானுடைய வேண்டுகோளை நிறைவேற்றும் பொருட்டு அசாஸ்த்ரீயங்களான வாதங்களையும் செய்யத் தொடங்கினர். பௌத்தமத ப்ரக்ரியையில் தோன்றின அவரது பேச்சுக்களைக் கேட்டு ஸஹித்திருக்கமாட்டாத பெருமாள் "யதா ஹி சோரஸ் ஸ ததா ஹி புத்த:* என்றார். புத்ததேவதை கள்ளத்தெய்வங்காணும் என்றபடி. ஆழ்வார் அந்த ராமசந்த்ரோக்தியை யடியொற்றியே ***கள்ளவேடத்தைக் கொண்டுபோய்*** என்றருளிச் செய்தார்.

கள்ளவேடங்கொண்ட புத்த முனியின் கதை கேளீர். தைத்திரீய யஜுஸ் ஸம்ஹிதையில் ஆறுவது காண்டம் இரண்டாவது பிரச்னத்தில் "தேஷாம் அஸுராணும் திஸ்ர: புர ஆஸந் அயஸ்மய்யவமா அத ரஜதா அதஹரிணீ தா தேவா ஜேதும் நாசக்நுவந்" என்று தொடங்கி—முப்புரங்கள்பெற்ற மூன்றஸுரர்கள் தேவர்களால் வெல்லமுடியாத வர்களாயிருந்தனர் என்று கூறப்பட்டது. அதற்கு மேற்பட்ட கதாஸந்தர்ப்பம் புராண ப்ரஸித்தமாய் விளங்காநின்றது. அசுரர்கள் கோரமான தவம்புரிந்து உருத்திரக் கடவுளை உகப்பித்து லோகவிலக்ஷணங்களான மூன்று பட்டணங்களைப் பெற்றுப் பொறுக்க வொண்ணுத தீம்புகளைச் செய்துகொண்டிருந்தார்கள். அவர்களை எவ்விதத்திலும் கொல்ல முடியாமலேயிருந்தது. பிறகு தேவர்களனைவரும் சங்கசக்ரகதாபாணியான திருமாலைச் சரணமடைந்து அவ்வசுரர்களை வதைக்குமுபாயத்தைத் தெரிவிக்குமாறு வேண்டினர்கள். அவ்வசுரர்கள் வைதிக தருமங்களை யனுட்டிப்பதில் ஊக்கமுடையராயிருக்கின்றன ரென்றும் ஆனதுபற்றியே அவர்கள் வெல்லமுடியாதவர்களா யிருக்கின்றனரென்றும் உண்மையை யுரைத்தார்கள் தேவர்கள். அது கேட்ட திருமால் தம்முடைய திருமேனி யினின்று மாயாமோஹ ரூபமொன்றையுண்டாக்கி அதைத் தேவர்களிடம் தந்து "இந்த மாயாமோஹம் மாயாவாதங்களினால் அசுரர்களை மயக்கவல்லது; இதனால் அவ்வசுரர்கள் வேதமார்க்க பஹிர்ப்பூதர்களாகி எளிதில் வதைக்கப்படுவர்கள்; போங்கள்" என்று விடை கொடுத்தருளினர் (திருமால்). பிறகு ஸந்துஷ்டசித்தர்களாய்ப் புறப்பட்ட தேவர்களோடு கூடச்சென்ற மாயாமோஹன் நருமதாநதியின் கரையில் பலவகைப்பட்ட வைதிககருமங்களை யனுட்டித்துக்கொண்டிராநின்ற அவ்வசுரர்களின் எதிரே திகம்பரமாய் முண்டமாய் மயில் தோகையைக் கையில் கொண்டதாய்த் தன்னுருவத்தைக் காட்டி நின்று, அவர்களுக்கு தருமத்தில் வைமுக்கியமும் அதர்மத்தில் ஆபிமுக்கியமும் உண்டாகும்படியான கூடயுக்திவாதங்களை அதிகமாகப் பேச, அவர்கள் மோஹிதர்களாய் வைதிக கருமங்களையெல்லாம் விட்டொழித்து வேதங்களை நிந்திக்கவும் புகுந்தனர். பிறகு அவர்களை வதைப்பது அமரர்களுக்கு எளிதாயிற்று—என்னுமிக்கதை புராணரத்னமான ஸ்ரீ விஷ்ணு புராணத்தில் மூன்றும் அம்சத்தில் பதினேழாமத்யாயத்தில் விரித்துரைக்கப்

பட்டுள்ளது. இந்த மாயாமோஹனுக்கே புத்ததேவதையென்று மறுபெயர். இவன் பேசின மாயாவாதங்கள் அவ்விடத்திலேயே பதினெட்டாமத்யாயத்தில் பரக்கக் காணத் தக்கவை.

பகவான் தர்மஸம்ஸ்தாபனத்திற்காகத் திருவவதரிப்பவனுயிருந்துவைத்து, தர்ம மார்க்க நிஷ்ணுதர்களுக்கு இப்படி தருமருசியைக் குலைக்கலாமா? என்று கேள்வியுண்டாமளவில் மேலையார் இங்கு ஸமாதானமாகக் கூறுவது, *அஸதாம் தர்மபுத்திச் சேத் ஸதாம் ஸந்தாபகாரணம், உபோஷிதஸ்ய வ்யாக்ரஸ்ய பாரணம் பசுமாரணம்:" என்பதேயாம். இந்த சுலோகம் முந்தின கட்டுரையில் விவரிக்கப்பட்டது காண்க. ... ❋

## "அடியார்க்கென்னை யாட்படுத்த விமலன்"

திருப்பாணுழ்வார் அருளிச்செய்த *அமலனுதிபிரான் தொடக்கத்தில் "அடியார்க்கு என்னை யாட்படுத்த விமலன்" என்கிற ஸ்ரீஸூக்தியுள்ளது. இதனுல் ஆழ்வார் தமக்கு பாகவத சேஷத்வம் ஸித்தித்ததாக அநுஸந்தானம் செய்துகொண்டபடி. இவருடைய கதையோ இதற்கு நேர்மாறுகக் காண்கிறது. இவர்க்கு **முனிவாஹன** ரென்று திருநாமம். *ஆபாத சூட மநுபூய* என்கிற தனியனில் ***மாநவை முநிவாஹநம் தம்*** என்றுள்ளது ப்ரஸித்தம். லோகஸாரங்க மஹா முனிகளின் தோளின்மேலேறி வீற்றிருந்தவர் இவ்வாழ்வார் என்பது இவருடைய சரித்திரத்தில் விசதம். அதுபற்றியே முநிவாஹனரென்று திருநாமமாயிற்று. இவரோ ஜகந்ய ஜாதீயர். அவரோ உத்தம ஜாதீயரும் உத்தமாச்ரமிபுமானவர். அப்படிப்பட்ட மஹா புருஷரை இவர் தோளிலேற்றிக்கொண்டு நடந்தாராகில் அடியார்க்கு ஆட்பட்டவராவர். அவர் தோளின் மேலே இவர்தாம் ஏறிவீற்றிருந்து [தம்முடைய சேஷித்வத்தைக் காட்டிக்கொண்டிருந்து] பாகவத சேஷத்வம் தமக்கு ஸித்தித்ததாகச் சொல்வது எங்ஙனே பொருந்தும்? என்று சங்கிக்க நேர்கின்றது.

இங்கு நம் ஆசாரியர்கள் தெளிவு பெறுத்துவது எங்ஙனேயென்னில்: சேஷத்வத்திற்காட்டிலும் மிகச்சிறந்தது பாரதந்த்ரியம். அந்த பாரதந்திரியம் தமக்கு நன்கு ஸித்தித்தபடியாலே அதையிட்டு "அடியார்க்கென்னை யாட்படுத்த விமலன்" என்னக்குறையில்லை—என்பதாக.

இதனைச் சிறிது விவரிப்போம். லோகஸாரங்க மஹாமுனிகள் திருப்பாண் பெருமாள் பக்கலில் முந்துற அபசாரப்பட்டுப் பிறகு எம்பெருமானருளால் மனம் திருந்தி அவரைத் தோளில் தூக்கிக்கொண்டு போக நிச்சயித்தபோது பாண்பெருமாள் இதற்கு நாம் இசைவது ஸ்வரூபவிருத்தமென்று இருய்த்திருந்தும் முடிவில் முனிகளின் தோளின் மேல் ஏறி உட்கார்ந்துகொண்டே திருமஞ்சனக்காவேரியிலிருந்து அரங்கன் ஸன்னிதானத் தளவும் சென்றிருக்கிருர். இது சேஷத்வவிருத்தமான நிகழ்ச்சியென்று பலரும் பழிக்கக் கூடுமென்று தோன்றவே, அங்ஙனம் பழி விளையாமைக்காக *அடியார்க்கென்னை யாட்படுத்த விமலன்* என்று உபக்ரமித்தார். இதன் கருத்து என்னவென்ருல், அடியேன்

என் செய்வேன்! எம்பெருமான் எனக்கு ஸ்வசேஷத்வத்தை உணர்த்துவதற்குமுன்னே பாகவதசேஷத்வத்தை யுணர்த்திவைத்தான்; அதிலும் சேஷத்வத்தளவிலே நில்லாமல் பாரதந்த்ரிய பர்யந்தமாக உணர்த்திவைத்தான். பாரதந்த்ர்யமென்பது க்ரியாபர்யவஸாயி யானுலொழிய ஸ்வரூபஸித்திபெற வழியில்லை. 'என் தோளின்மேல் ஏறு' என்று அவர் சொல்ல அதற்கு நான் இசையாதே இருய்த்தேனுகில் சேஷத்வகாஷ்டை பழுதாகுமே. அடியார்க்கென்னை யாட்படுத்தவேதான் நான் பெரியார் தோளிலே ஏறி உட்கார நேர்ந்தது —என்பதே இங்கு விவக்ஷிதம்.

இவ்விடத்தை வியாக்கியானித்தருளாநின்ற பெரியவாச்சான் பிள்ளை "தான் சேஷித்வத்தினுடைய எல்லையிலே நின்ருப்போலே சேஷத்வத்தினெல்லையிலே என்னை வைத்தான்" என்றருளிச் செய்ததை அழகிய மணவாளப் பெருமாள் நாயனுர் தம்முடைய வியாக்கியானத்திலே விவரித்தருளுகிருர்—"தம்மை வஹித்தவளவில் தாம் சேஷபூதரானபடி யென்னென்னில்; திருத்துழாய் திருவபிஷேகத்திலே யிருந்ததென்னு சேஷத்வம் குலையாதே" என்று. *தோளிணைமேலும் நன்மார்பின்மேலும் சுடர்முடிமேலும் தாளிணைமேலும் புனைந்த தண்ணந்துழாயுடையம்மானுனை எம்பெருமான் திருத்துழாயைத் தோளில் கொள்வதோடு தாளில் கொள்வதோடு வாசியில்லையே. அசித்வத் பாரதந்த்ர்ய மன்ரே நமக்கு ஸ்வரூபம்; முனிகளின் ஆணையை மீறினுேமாகில் நம் பாரதந்த்ரியம் பாழாய்ப் போகுமத்தனையன்ரே என்ருயிற்று பாண்பெருமாள் பாவித்தது.

சித்திரகூடத்திலிருந்து மீளும் பரதாழ்வானைப்பற்றி *ஸ காமம் அநவாப்யைவ* என்னச்செய்தேயும் *ஆருரோஹ ரதம் ஹ்ருஷ்ட:* என்றும் சொல்லிற்று. மனுேரதம் நிறைவேறப்பெருதவனுக்கு ஹர்ஷம் எங்ஙனே கூடுமென்று கேள்விவரும். இளைய பெருமாளுக்கு ஸித்திக்காத பாரதந்த்ர்யம் நமக்கு ஸித்தித்ததேயென்று ஹ்ருஷ்டனுனன் பரதாழ்வான். பெருமாள் நில் என்ன, நிற்கமாட்டேனென்ற இளையோனுக்குப் பாரதந்திரியம் ஸித்திக்க வழியில்லையாயிற்று. அந்த அபக்க்யாதி நமக்கில்லையேயென்று பரதாழ்வானுக்கு ஹர்ஷம். இத்தகைய சுவைமிக்க விஷயங்கள் பரிமளிக்கும்படியமைந்தன பூர்வாசார்ய வியாக்கியானங்கள். 'முநிவாஹன போகத்தில் இச்சுவைகளைச் சுவைத்துண்ண ப்ரஸக்தியுண்டோ'வென்று ஒரு ரஸிகர் நம்மைக் கேட்டார். எடுத்துப் பார்க்கலாமேயென்று சொல்லி நின்றேன். ... ... ...

கடிதம்

## இன்னிசை விருந்துகளும் விருதளிப்புப் பரிசுகளும்.

[M. V. கிருஷ்ணன், திருவல்லிக்கேணி பஜனை மடம்.]

"குருகூர்நம்பி பாவின் இன்னிசை பாடித்திரிவனே" என்கிற ஸ்ரீ மதுரகவிகளின் திருவாக்கை மெய்ப்பிக்கும் ரீதியில் ஸ்ரீ வைணவவுலகில் திவ்யப்பிரபந்த இசைப் பாடலனுபவம் சமீபகாலத்தில் சில திவ்யதேசங்களில் தொடர்ந்து நடந்துவரும் ஆனந்தச் செய்தியை மிக்க மகிழ்ச்சியுடன் தெரிவித்துக்கொள்ளுகிறேன். ஸ்ரீமதி. சுபத்ரா என்பவரும் கல்யாணி பத்மநாபன் என்பவரும் பகவத் பாகவத ஆசார்யகடாக்ஷ விசேஷத்தினுல்

இன்னிசை வல்லமை பெற்று ஆங்காங்கு திவ்யதேசங்களில் விசேஷோத்ஸவ காலங்களில் இசை பாடிவருவது பக்தர்களுக்கும் பாகவதர்களுக்கும் ஒரு பெரிய விருந்தாக அமைந்து வருகின்றது. திருவிடவெந்தையில் நேற்று சித்திரை மாதத்தில் நடைபெற்ற பிரம்மோத்ஸவத்தில் ஏகாந்த சேவையென்னும் கெட்டத்தில் மேலே குறித்த இரு பெண்மணிகளும் விடிய விடியப் பாடினதில் எம்பெருமானும் பரவசமெய்தினதாகப் பலர் பேசிக் கொண்டார்கள். அப்போது பக்கவாத்யங்களின் சிறப்பும் புகழத்தக்கதாயிருந்தது. பிடில் வாசித்த ஸ்ரீ சர்மாவும் மிருதங்கம் ஒலித்த ஸ்ரீ பார்த்தசாரதியும் மேலே குறித்த இசைப் பாடலை மிக நயம் பெறுத்தினர். பஜனையும் நடந்தது. ஆண்களும் பெண்களும் பல உத்யோகஸ்தர்களும் திரண்டு வந்திருந்து நாத வெள்ளத்தில் திளைத்தார்கள். அபிநவ மீரா முக்தாபாய் என்று சொல்லலாம்படியிருந்தது.

ஸ்ரீபெரும்பூதூரில் ஏழாம் உத்ஸவத்தன்று புஷ்பால ஸ்ரீ கன்னைய நாயுடு சாரிடி ஆதரவில் இவர்களின் கச்சேரி தகுந்த பக்கவாத்யத்துடன் நடைபெற்றது. ஜீயர் ஸ்வாமியும், ப்ரதிவாதிபயங்கரம் ஸ்ரீ அண்ணங்கராசார்ய ஸ்வாமி முதலியவர்களும் திருச்செவிசாத்தி மங்களாசாஸனம் செய்தருளினார்கள். திருவல்லிக்கேணியில் உடையவர் சாத்துமுறையில் வீதி பஜனையும், வைசாகோத்ஸவத்தில் கருடசேவையன்று பெருமாள் கோயிலில் ஸ்ரீ நம்பிள்ளை சன்னிதியிலும் நடைபெற்றது. ஸ்ரீமதி சுபத்ரா அவர்கள் பல ஸம்வத்ஸரங்களுக்கு முன்னாலேயே ஸ்ரீ அண்ணங்கராச்சார்ய ஸ்வாமியாலே ஞானபூஷணி என்று பட்டம் பெற்றவர். சென்னை ஸ்ரீ வைஷ்ணவ மகாநாட்டில் பலவாண்டுகளில் பணியாற்றியவர். இசையரசி முதலிய பட்டங்கள் பெற்றவர். ஸ்ரீமதி கல்யாணி பத்மநாபன் மிக்க பெரும் புகழுடைய ஸ்ரீ வளர்புரம் உ. வே. பாஷ்யமய்யங்கார் ரிடயர்ட் ஹைகோர்ட் ஜட்ஜ் அவர்களின் கடைசி மணுட்டுப்பெண். அந்த ஸ்வாமி பரமபதிக்கும் வரை வழுவிலாது கைங்கர்யம் செய்தவர். பல சங்கீத சபைகளில் கச்சேரி செய்து ரேடியோவிலும் பாடுபவர். பல இடங்களில் இசைக்கு ஜட்ஜாக பணியாற்றின இவ்வம்மை ஏற்கனவே "இசைச் செல்வி", "அபிநவ திலககாமோதம்" என்கிற பல பட்டங்களைப் பெற்றவர். அன்று ஸ்ரீ அண்ணங்கராசார்ய ஸ்வாமியால் **மதுரபாஷிணி** என்கிற விருதைப் பெற்றார். புருஷர்களின் பஜனை கோஷ்டியில் நெம்மேலி ஆளவந்தார் நாயகர் சாரிடி குழுவினரால் நடந்துவரும் திவ்யப்ரபந்த பண்ணிசைப் பாடசாலையில் பணியாற்றிவரும் காஞ்சீபுரம் நயினாபிள்ளை சிஷ்யரான ஸ்ரீ M. N. வேங்கடவரதனுக்கு அருளிச்செயல் திலகம் என்கிற பட்டம் ஸ்வாமியால் வழங்கப்பட்டது.

24—5—68 வெள்ளிக்கிழமை சென்னகேசவப்பெருமாள் கோயில் வசந்தோத்ஸவத்தில் கோவிந்தப்ப நாயகன் தெருவிலுள்ள வசந்தமண்டபத்தில் ஸ்ரீ உ. வே. அண்ணங்கராசார்ய ஸ்வாமி பெரிய பிராட்டியார் வைபவம் என்கிற விஷயத்தை உபன்யசித்தார். ப்ரார்த்தனை கீதத்தில் நூற்றெட்டு திவ்யதேசப் பாடல், பெருந்தேவி நாச்சியார் விஷயப் பாடல்களை ஸ்ரீமதி கல்யாணி பத்மநாபனும் சுபத்ராபாயும் பாடியதை கோஷ்டியார் மிகவும் ரஸித்தார்கள்.

ஸ்ரீவைஷ்ணவ உலகில் இப்படி ப்ரபந்த இசை மேன்மேலும் வளர கானபரவசனான கரிவரதன் அருள்புரிய ப்ரார்த்திக்கிறோம். இவர்கள் அனைவருக்கும் நமது மங்களாசாஸனம்.

— இப்படிக்கு, M. V. K. **தாசன்.**

# எழுபத்தேழு பெரியார்களின் பெருமை.

## 54. ஸ்ரீமதுபயவே. யோகி. பார்த்தஸாரதி ஐயங்கார்ஸ்வாமி.

பலகாலம் திருவல்லிக்கேணியிலெழுந்தருளியிருந்த இந்த ஸ்வாமி வித்வானுயிருந்த தோடுகூட பிரபல தனிகராயுமிருந்தார். அதனுல் இந்த ஸ்வாமி செய்தருளின லோகோப காரங்கள் அளவுகடந்தவை. உபயவேதாந்த க்ரந்தங்கள் பலவற்றை அச்சிட்டு வெளி யிட்டிருக்கிருர். அவற்றுள் இரண்டு மஹா க்ரந்தங்களை மட்டும் இங்குக் குறிப்பிடு கிறேன். (1) ஸ்ரீ வசனபூஷண வியாக்கியானம் இரண்டு அரும் பதவுரைகளோடும் ஸ்ரீ வசனபூஷண மீமாம்ஸா பாஷ்யத்தோடும் [ஆயிரம் பக்கங்களுக்குமேல் கொண்ட மிகப் பெரிய ஸ்ரீகோசம்] இம்மஹான் தெலுங்கு லிபியில் அச்சிட்டு வெளியிட்டது (2) ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாம பாஷ்யம் நிர்வசனுதிகளோடுங்கூட மிகப் பெரிய ஸ்ரீகோசமாகத் தெலுங்கு லிபியிலேயே அச்சிட்டார். மற்றும் பலபலவுண்டு. காஞ்சீபுரத்தில் வித்வத்ஸிம்ஹமாக எழுந்தருளியிருந்த ஸ்ரீமத். குன்றபாக்கம் ஸ்வாமி இந்த மஹானேடு அதிகமாகப் பழகினவர். அந்த ஸ்வாமி இவருடைய மேதையையும் ப்ரதிபையையும் பலகால் ப்ரசம்ஸித்து ஸாதிக்கக் கேட்டிருக்கிறேன். நானும் நேரில் அநுபவித்திருக்கிறேன். இந்த ஸ்வாமிக்கு சக்ரவர்த்தி திருமகன் கனவிலே ஸேவை ஸாதித்துத் திருவயோத்தியில் ஸன்னிதி ப்ரதிஷ்டை செய்யும்படி நியமிக்க, அந்த நியமனத்தை சிரஸாவஹித்து அயோத்யையில் **கோலாகாட்** என்று ப்ரஸித்தமான ஸரயூதீரத்தில் தாக்ஷிணுத்ய ப்ரக்ரியையிலே திவ்யஸன்னிதி நிர்மாணம் செய்வித்து ப்ரதிஷ்டை பண்ணியிருப்பது ப்ரஸித்தமான விஷயம். இற்றைக்கும் தாக்ஷிணுத்யர்களைக் கொண்டே திருவாராதனம் நடைபெறுத்தப்பட்டு வருகிறது. இந்த ஸன்னிதியை அம்மாஜீமந்திர் என்றே வடநாட்டினர் வழங்குவர். இந்த ஸ்வாமியின் தேவியாரான சிங்கம்மாவின் திருநாமம் அம்மாஜீ யென்பது. இந்த அம்மா தம்முடைய வாழ்நாளைப் பெரும்பாலும் இந்த ஸன்னிதியிலேயே கழித்தார். பகவத் விஷயத்திலும் ரஹஸ்ய வியாக்கியானங்களிலும் இந்த அம்மாவுக்கிருந்த ப்ரஜ்ஞை அமோகமானது. ஒருநாள் தவருமல் ப்ரவசனம் செய்துகொண்டிருந்ததை நேரில் பலகால் அநுபவித்திருக்கிறேன். ஸ்ரீமத் பரமஹம்ஸ. அயோத்யா. ராமாநுஜஜீயர் ஸ்வாமி [கோயில் ஸ்ரீரங்க நாராயணஜீயர் ஆஸ்தானத்தில் சிலவாண்டுகள் எழுந்தருளியிருந்து விலகினவர்] க்ருஹஸ்தாச்ரமத்தில் ப்ரவேசியாமல் ப்ரஹ்மசர்யாச்ரமத்திலேயே யிருந்தவர் அயோத்யை ஸன்னிதியில் சிலவாண்டுகள் கைங்கர்யபரராயிருந்துகொண்டு சிங்கம்மாவிடத்திலேயே ஸ்வரூபக்ரந்தங்க ளெல்லாம் அதிகரித்தவர். ஸ்ரீபெரும்பூதூரில் எம்பார் ஜீயர்ஸ்வாமியாக எழுந்தருளி யிருந்த சிறுகுன்றம் ஜீயர் ஸ்வாமியும் அப்படியே. இவ்விரு ஸ்வாமிகளும் இந்த அம்மாவின் தனியனை ஸேவித்தே காலக்ஷேபங்கள் செய்தருளினதாகப் பலகால் ஸாதிக்கக் கேட்டிருந்தேன். உத்தராதி வைஷ்ணவர்கள் பலர்க்குங்கூட ஸ்வரூபக்ரந்தங்களை ப்ரவசனம் செய்துகொண்டு வாழ்ந்த மஹாநுபாவை. இந்த விலக்ஷண தம்பதிகளின் சிந்தனையைப் பரம புனிதமாக நினைத்துச் செய்தேனின்று. ... ... ❁

## 55. ஸ்ரீமதுபயவே. தேவசிகாமணி. ராமாநுஜாசார்யஸ்வாமி.

மண்டயம் தேவசிகாமணி ஸ்வாமியென்று ப்ரஸித்தராயிருந்த வித்வான் பரமபதித்து இருபத்தைந்து ஸம்வத்ஸரங்களுக்கு மேலாகிறது. இவர் மைஸூரில் வாசித்து விசேஷத: மீமாம்ஸா சாஸ்த்ரத்திலும் உபயவேதாந்தங்களிலும் அத்விதீய வித்வன்மணியாக விளங்கினவர். அயோத்யையிலும் ப்ருந்தாவனத்திலும் பல ஸம்வத்ஸரங்கள் வாழ்ந்து சாஸ்த்ர ப்ரவசனம் செய்தவர். மிகச் சிறந்த க்ராந்திகர். அடையாறில் அச்சாகி வெளிவந்த அஹிர்ப்புத்ந்யஸம்ஹிதை வெகு ஆச்சரியமான பதிப்பு. அதற்கு இந்த ராமாநுஜாசார்ய ஸ்வாமியே பரிஷ்காரகராயிருந்தவர். அந்த ஸம்ஹிதைக்கு இந்த ஸ்வாமியெழுதி வெளியிட்டுள்ள மிக விரிவான பூமிகையை வாசித்துப் பார்ப்பவர்களுக்கு இவருடைய வித்யா பரிச்ரமம் அத்விதீயமென்பது புலப்படும். இவருடைய லேகனங்களும் பாஷணங்களும் மிகச் சிறந்து விளங்கின. ... ... ... ... ❋

## 56, 57, 58. குன்றபாக்கம் வித்வான்கள் மூவர் பெருமை.

(1) **திருமலை. விஞ்சிமூர். ஸ்ரீ ரங்காசாரியர்ஸ்வாமி.**

(2) **திருமலை. அனந்தாண்பிள்ளை. ராமாநுஜாசார்யஸ்வாமி.**

(3) **திருமலை. அனந்தாண்பிள்ளை. (அப்பா) பாஷ்யகாரஸ்வாமி.**

மேலே குறித்த மூன்று திருநாமங்களும் (மலையடி) குன்றபாக்கத்து வித்வன் மணிகள். அடிக்கடி அடியேன் ப்ரஸ்தாவிக்கிற ஸ்ரீ குன்றபாக்கம் சீமாச்சார்ஸ்வாமியின் ஸமகாலத்தவர்களும், அவர் தம்மாலும் கொண்டாடப்பட்டவர்களுமான வித்வான்கள். இவர்களுள் முன்னே குறித்த தி. வி. ஸ்ரீரங்காசார்யஸ்வாமியின் திருத்தகப்பனூர் அய்யாஸாமி ஐயங்காரென்று ஸுப்ரஸித்தராம். ராகவாசார்யஸ்வாமியென்று திருநாமமாம். அந்த ஸ்வாமியை அடியேன் அறியேன். அவரை ப்ரசண்ட பண்டிதோத்தமரென்பர்கள். அவரிடம் சாஸ்த்ரங்கள் பயின்று தேறினவர்களே குன்றபாக்கத்து வித்வான்களெல்லாரும். மேலே குறித்த ஸ்ரீரங்காசார்ய ஸ்வாமியின் திருக்குமாரர்கள் மூவர் விளங்கிவருகிறார்கள். ஸ்ரீ ராமாநுஜாசார்ய ஸ்வாமியின் பௌத்ரரான ஸ்ரீசைல க்ருஷ்ணமாசாரியரென்பவர் ப்ரவசன ப்ரவீண பண்டிதராய் விளங்கிவருகிறார். (அப்பா) பாஷ்யகாரஸ்வாமி யென்பவர் திருவல்லிக்கேணியில் பலர்க்கு ப்ரவக்தாவாக வாழ்ந்திருந்தவர். இப்பெரியார்கள் வாழ்ந்த காலம் மிகவும் வ்யவஹிதமானாலும் இவர்கள் வித்வத் கணனையில் ப்ரஸித்தர்களாக விளங்கிவருபவர்கள். இவர்களோடு அடியேன் நெருங்கிப் பழகின பாக்கியமுடையேன். ... ... ... ❋



# ஸ்ரீமந்நாதமுனிகள் மஹோத்ஸவம்.

ஒரு ஸம்வத்ஸரத்திற்குள்ள பன்னிரண்டு மாஸங்களேயும் ஆராய்ந்துபார்த்தால் உத்ஸவ சூன்யமான மாஸம் ஒன்றுகூட இல்லேயென்பது உறுதி. சில மாஸங்களில் ஆழ்வார்களின் உத்ஸவங்கள்; சில மாஸங்களில் ஆசாரியர்களின் உத்ஸவங்கள். சில மாஸங்களில் ஆழ்வாராசாரியர்களின் உத்ஸவங்கள் — இப்படியாக அநுபவ ரஸிகர்களுக்கு ஆனந்த ஸந்தோஹமயமாகக் காலம் கழிவதற்கு மஹோத்ஸவ விசேஷங்கள் ஆங்காங்கு நிகழ்ந்துவருவது *காம்பறத் தலே சிரைத்து உன் கடைத்தலே யிருந்துவாழுஞ் சோம்பர்* என்று தொண்டரடிப் பொடியாழ்வாரால் கொண்டாடப்பட்ட பக்த பாகவதோத்தமர்களுக்குமிகச் சிறந்த விருந்தாகும்.

நம்முடைய ஸம்பிரதாயத்தில் ஆசாரியர்கள் பலர் அவதரித்திருந்தாலும் ஸ்ரீமந்நாதமுனிகளுக்கு ஒப்பாரில்லேயன்றே- அவர் பட்ட பரிச்ரமத்தின் பலனேயன்றே ஸ்ரீ வைஷ்ணவ ஸந்தானம் அநுபவித்து வருகின்றது. அவர் பரிச்ரமம் கொள்ளவில்லே யென்ருல் இன்று நாம் என்ன செய்துகொண்டிருப்போமென்பதை உண்மையான ஸ்ரீவைஷ்ணவர் ஒவ்வொருவரும் அந்தரங்கத்தில் ஆராய்ந்து பார்க்கவேணும். உண்டுடுத்துத் திரிவோமென்பதில் ஸந்தேஹமில்லே.

நாதமுனிகளின் திருவவதார ஸ்தலம் காட்டுமன்னூர் ஸன்னிதி. ஆனி மாதம் அனுஷம் ஸ்வாமியின் திருவவதார நக்ஷத்திரம். நாளது ஆனிமீ 15உ (28—6—68) முதலாக அவ்விடத்தில் பத்துநாளும் தினப்படி காலேயும் மாலேயும் திருவீதி யுத்ஸவாதி வைபவங்கள் மிகச் சிறப்பாக நடைபெறும். சில வருஷங்களில் அடியேன் சிலநாட்களிருந்து ஸேவித்து ப்ரஹ்மானந்த மநுபவித்திருக்கிறேன். இந்த திவ்ய ஸ்தலத்தில் பல ஸம்வத்ஸரங்களாக நடந்துவந்த திருப்பணிகள் ஒருவாறு பூர்த்தியாகி நேற்று தைமாத முடிவில் மஹாவைபவம் பொலிய ஸம்ப்ரோக்ஷண மஹோத்ஸவம் நடைபெற்றிருப்பதை பக்தர்கள் பெரும்பாலும் நேரிலனுபவித்தும் பத்திரிகைகளில் வாசித்து மிருக்கிருர்கள். திருப்பணிகளெல்லாம் அவ்வளவோடு பூர்த்தியாய்விட்டதாக நினேப்பதற்கில்லே, இன்னமும் ப்ராகாரத்தில் பல பாகங்களின் ஜீர்ணோத்தாரணம் சேஷித்திருக்கிறது.

நடந்ததும் நடக்கவேண்டியதுமான ஜீர்ணோத்தாரணங்களேயும் உத்ஸவாதிகளேயும் மிகுந்த பக்தி ச்ரத்தையுடனும் பொறுப்புடனும் நிர்வஹிப்பவர் ஸ்ரீமதுபயவே. C. பார்த்தஸாரதி ஐயங்கார் ஸ்வாமிகள். இந்த ஸ்வாமியின் ஊக்கத்தைப் பத்துஸம்வத்ஸரங்களுக்குமேலாக அடியேன் ப்ரத்யக்ஷாநுபவத்திஞலறிந்தவன். நேற்று தைமாதத்தில் நடந்த ஸம்ப்ரோக்ஷண மஹோத்ஸவத்தில் இந்த பார்த்தஸாரதி ஐயங்கார் ஸ்வாமிக்கு ஒரு விருது சாற்றவேணுமென்று விரும்பினேன். அந்தஸ்வாமி க்க்யாதிலாப பூஜா நிரபேக்ஷராகையிஞலே அடியேனுடைய மனோரதம் நிறைவேறுவதற்கு அவகாசமில்லேயாயிற்று. ஆனுலும் அடியேனுடைய மனோரதம் பழுதுபடலாகாதாதலால் இப்போது பத்ரிகையின் மூலமாக அதனேப் பிரசுரப்படுத்துகிறேன்;...

## நாதயாமுனதர்சன துரந்தரர்

என்கிற விருது ஸ்ரீமத் பார்த்தஸாரதி ஐயங்கார் ஸ்வாமிக்குச் சிறந்தோங்குக. "தர்சன துரந்தரர்" என்பது ஸம்க்ஷேப விருதாகலாம். இந்த ஸ்வாமி நீடூழிகாலம் வாழ்ந்து நாதயாமுந தர்சன ஸபா காரியங்களை நிரந்தரமாகவும் நிரந்தராயமாகவும் நிறைவேற்றிவரவேணுமென்று ஆசாஸிக்கிறோம். .... .... (*)

---

ஸ்ரீமத் பரமஹம்ஸ - ஸ்ரீபெரும்பூதூர் எதிராஜ ஜீயர் மடாதிபதி
பேரருளாள ராமாநுஜ ஜீயர் ஸ்வாமியின்

## ஸ்ரீமுகம் - புனர்வஸுபத்திரிகை விஷயமாக.

கீலக சித்திரை (நெ 129) புனர்வஸுபத்ரிகையில் பக்கம் 12ல் பண்டித சிரோமணி ஸ்வாமி யொருவர் புள்ளம்பூதங்குடி யென்று தலையங்கமிட்டு எழுதிய கட்டுரை யொன்றை வாசிக்கையில் "கற்பாரிராமபிரானையல்லால் மற்றுங் கற்பரோ" என்கிற திருவாய்மொழிப் பாசுரத்தை முன்னிட்டுக் கொண்டு எழுதிப் போருமவர் "......... இதனை [ஸாகேதே முக்திதாநாத் ஸ்திரசரஜநுஷாம்] என்று த்ரமிடோபநிஷத்தாத்பர்ய ரத்னாவலியில் ஸ்ரீ நிகமாந்த மஹாதேசிகன் அநுபவிக்கின்றார்" என்றெழுதியிருப்பதைக் கண்டோம். அநுபவிக்கின்றாரென்னும்படி இங்கே அநுபவம் என்னவுள்ளதென்று தெரியவில்லை. (ஸாகேதே முக்திதானாத்) என்ற வாக்கியம் *கற்பாரிராமபிரானையல்லா லென்கிற பாசுரத்தில் *நற்பாலயோத்தியில் வாழும் சராசரம் முற்றவும் நற்பாலுக்குய்த்தனன்* என்கிற பின்னடிகளின் கருத்தையுட்கொண்டு ஸாதித்ததாகக் காண்கிறது. ஸ்ரீ குலசேகராழ்வார் பெருமாள் திருமொழியின் முடிவில் *அன்று சராசரங்களை வைகுந்தத் தேற்றி* என்றருளிச் செய்திருப்பது போல நம்மாழ்வாரும் *நற்பாலயோத்தியில் வாழு மித்யாதியினால் அதே அர்த்தத்தையே அருளிச்செய்வதாக நிகமாந்த குரு நிர்ணயித்ததாய் ஏற்படுகிறது. இல்லையாகில் 'முக்திதானாத்' என்று கூறியிருக்க மாட்டாரன்றோ. இங்கே சொல்லப்படுவது முக்திதானமா என்று பார்க்கவேணும்.

ஆறாயிரப்படி ஒன்பதினாயிரப்படி இருபத்து நாலாயிரப்படி முப்பத்தாறாயிரப்படி ஆகிய இந்த வியாக்கியானங்களில் ஒன்றிலும் முக்திதான மென்கிற அர்த்தம் செய்யப்பட்டிருக்கவில்லை. கூரத்தாழ்வான் அதிமாநுஷஸ்தவத்தில் "வம்சம் ரகோரநுஜிக்ருக்ஷுரிஹாவதீர்ண: திவ்யைர் வவர்ஷித ததாத்ர பவத்குணௌகை:, த்வத்ஸந்நிதிப்ரபவசைத்யஜுஷோ யதா ஹி வ்ருக்ஷாச்ச தாந்திமலபந்த பவத்வியோகே." என்றருளிய சுலோகத்தை யநுஸரித்து அந்த மஹாகுண ப்ரதர்சந பரமாகவே பிள்ளான் முதலானோர் வியாக்கியானித்தருளியுள்ளார்கள். பெரும்பா

லும் (அல்லது) ஸாகல்யேந பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியானத்தையே கையில் கொண்டு அந்தவழி வழுவாமல் தாத்பர்யரத்னவளி பணித்த நிகமாந்தகுரு இவ் விடத்தில் பெரியவாச்சான்பிள்ளை படியைத் தழுவாமலும் பிள்ளான்படியைக்கூடத் தழுவாமலும் இப்படி யருளிச்செய்ததற்கு என்னகாரணமென்று பார்த்ததில், வாதிகேஸரி அழகியமணவாளச் சீயர் பணித்த பன்னீராயிரப்படியுரை ப்ரதிபதார்த் தம் தெரிந்துகொள்வதற்கு மிகவும் உபகாரகமாக இருப்பதனல், நிகமாந்தகுரு அந்த உரையையும் உபஜீவித்துக்கொண்டாரென்றும், முக்திதான மென்கிற அர்த்தம் அவ்வுரையில் இருப்பதால் அதை ஆதரித்து ச்லோகம் பண்ணினரென் றும் பெரியார் சொல்லத் தெரிந்து கொண்டேன்.

இந்த ப்ரஸங்கத்தில் அடியேனுக்குத் தோன்றிய ஒரு பெரிய ஸந்தே ஹத்தை விஜ்ஞாபிக்கிறேன். நிகமாந்தகுரு தம்முடைய ரஹஸ்யங்களில் ஆள வந்தார் சிஷ்யர்களினுடையவும் எம்பெருமானர் சிஷ்யர்களினுடையவும் திருநாமங் களை அனேகமாக எடுக்கிறர். எம்பார் முதலியாண்டான் அருளாளப்பெருமா ளெம்பெருமானர் வங்கிப்புரத்துநம்பி கூரத்தாழ்வான் பட்டர் நஞ்சீயர் சோமாசி யாண்டான் முதலானவர்களின் திருநாமங்களையும் தத்திவ்யஸூக்திகளையும்பலகால் உதாஹரிக்கக் காண்கிறேம். திருக்குருகைப்பிரான் பிள்ளானை ஓரிடத்திலாவது தொட்டிருக்கிறரா? அவர் திருவாய்மொழிக்கு ஆறுயிரப்படி வியாக்கியானமருளிச் செய்திருக்கிறரென்று ப்ரஸ்தாவமாவது செய்திருக்கிறரா? ஆறுயிரப்படியிலிருந்து ஒரு வாக்கியத்தையும் ஒரு அர்த்தத்தையும் எடுத்துக்காட்டாததோடு திருக் குருகைப்பிரான் பிள்ளானென்கிற நாவுக்கினிய நாமத்தைத் தமது கையினல் எழுதினதாகவே தெரியவில்லையே.

ஸ்ரீவசன பூஷணத்தில் "தன்னால் வரும் நன்மை விலைப்பால் போலே; அவனல் வரும் நன்மை முலைப்பால் போலே யென்று பிள்ளான் வார்த்தை" என்று பிள்ளை லோகாசாரியர் அருளிச் செய்துள்ளதை ரஹஸ்யத்ரயஸாரத்தில் சரமச்லோகாதிகாரத்தில் எடுத்துக் காட்டியிருப்பதுண்டு; இது தவிர ஆறுயிரப் படியின் ப்ரஸ்தாவமே ஓரிடத்திலும் செய்திருக்கவில்லையே. இதற்கு என்ன காரணமென்று விவேகிகள் விமர்சிக்க அவசியமில்லையா?

அன்றியும், திருவாய்மொழியில் (4—5—6) * கரியமேனிமிசை வெளிய நீறு சிறிதேயிடும் * என்றவிடத்திற்குப் பரசமயிகள் கூறும் பொருளை ஸச்சரித்ர ரக்ஷையில் மறுத்துரைக்குமிடத்தில் ஆறுயிரப்படியிலுள்ள நிர்வாஹத்தைத் தொடாமல் பெரியவாச்சான்பிள்ளையின் இருபத்து நாலாயிரப்படியில் தாம் ஸேவித்த நிர்வாஹத்தையே யெடுத்துக்காட்டி "இதி ஆசார்யா:" என்று கௌர வம் தோற்ற முடித்திருப்பதை ஸ்ரீ ப்ரதிவாதி பயங்கரம் ஸ்வாமி யெடுத்துக் காட்டி யிருப்பதைப் பார்த்திருக்கிறேன் ரஹஸ்யத்ரய ஸாரத்திலும் * குலந்தருமென் கிற பாட்டிலே பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியானித்தருளியிருப்பதை உதா ஹரித்திருக்கிறர் நிகமாந்தகுரு—என்பதையும் கண்டிருக்கிறேன். இப்படி ஆறுயிரப்படியிலிருந்து ஏதேனும் எடுத்துக் காட்டியிருப்பதுண்டோ? என்கிற ஆசங்கையை தேசிக க்ரந்தங்களில் நிரந்தராவகாஹனம் செய்துள்ள மஹான் கள் முலமாகத் தெரிந்து கொள்ள விரும்புகிறேன்.

திருவாய்மொழியில் ஒவ்வொரு பதிகத்திற்கும் இன்னது ப்ரமேயம் என்பதைத் திருக்குருகைப் பிரான்பிள்ளான் தெரிவிக்கிற ப்ரகாரமும் நம்பிள்ளை பெரியவாச்சான்பிள்ளைகள் தெரிவிக்கிற ப்ரகாரமும் சிலவிடங்களில் ஒற்றுமைப்பட்டிருந்தாலும் பலவிடங்களில் வேற்றுமைப்பட்டிருப்பதைக் காணநின்றோம். அவ்விடங்களில் நியமேந நிகமாந்தகுரு பெரியவாச்சான்பிள்ளையின்படியைத் தழுவியே தாத்பர்யரத்நவளி பணித்திருப்பது ப்ரஸித்தமாயிருக்கின்றது. ஆறுயிரப்படியை விசேஷித்து ஓரிடத்திலும் தழுவியிருப்பதாகத் தெரியவில்லை. குருபரம்பராஸார மென்கிற ரஹஸ்யத்தில் "எம்பெருமானார் திருமாலையாண்டான் ஸ்ரீ பாதத்திலே திருவாய்மொழி கேட்டார்" என்றெழுதிவைத்தவர் "திருக்குருகைப்பிரான்பிள்ளானைக் கொண்டு திருவாய்மொழிக்கு ஆறுயிரப்படி அவதரிப்பித்தார்" என்றெழுதியிருக்க வேண்டாவோ? அதைப்பற்றி ப்ரஸ்தாவமே செய்யாதிருப்பதும், பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியானத்தை யுபஜீவித்தே தாத்பர்யரத்நாவளி பணித்திருப்பதும் விமர்சகர்களின் விமர்சத்திற்கு வரவேண்டியது ஆவச்யக மென்பது அடியேனுடைய அபிப்ராயம். இதைப்பற்றி ப்ரதிவாதி பயங்கரம் ஸ்வாமி பல நூல்களில் விரிவுக்கு அஞ்சாமல் எழுதியிருந்தும் (அச்ருதிமபிநீய) (அத்ருஷ்டிமபிநீய) என்கிற ரீதியிலே யிருந்துவருமவர்களுக்கு நாமெழுதுவதெல்லாம் ஊமையரோடு செவிடர் வார்த்தையாகுமென்று நிற்கிறேன்.

இங்ஙனம்,

**ஸ்ரீ எதிராஜ ஜீயர்,** ஸ்ரீபெரும்பூதூர்.

## — பத்ராதிபப்ரதி போதனம் —

ஜீயர் ஸ்வாமிக்கு விடை விண்ணப்பம். ஜ்ஞாதவ்ய விஷயங்களை ஜிஜ்ஞாஸயா கேட்டாலும் ஜிகீஷயா கேட்பதாகவே நினைத்து ஸ்வகோஷ்டிகளில் க்ஷேபோக்திகளைப் பொழிவதற்குமேல் வேறொன்றும் செய்ய கில்லாத க்ருஹீதக்ராஹிகளிட மிருந்து என்ன விடைபெற முடியும்? "ஆறுயிரப்படி அத்யந்த ஸம்க்ஷிப்த வியாக்கியானமாயிருந்தபடியாலே அதைவிட நான்கு மடங்கு பெரிதான பெரியவாச்சான் பிள்ளையின் இருபத்து நாலாயிரப்படி வியாக்கியானத்தை ஸ்வாமி தேசிகன் காலக்ஷேபத்தில் ஆதரித்தருளினரென்றால் இதில் என்ன அவத்யம்?" என்று ப்ராமாணிகமாகச் சொல்லிக் கொண்டிருந்தவர் ஸ்ரீ கோஷ்டீபுரம் ஸௌம்ய நாராயணாசார்ய ஸ்வாமி யொருவரே. "த்ருட பூர்வச்ருதோ மூர்க்க:" என்றதற்கு ப்ரதம லக்ஷ்யமாக விளங்கிவரும் இக்காலத்தவர்களில் தலைவராக ப்ரஸித்தரான வொருவர், தேசிகனுகந்த ஆசார்ய ஸார்வபௌமர்களைத் தலைகால் தெரியாமல் நிந்திப்பதுதான் தேசிகனைத் துதிப்பது என்றும், இதர ஆசார்யர்களைத் திரஸ்கரித்து எழுதுவதுதான் தேசிக ப்ரபாவகீர்த்தனம் என்றுங்கொண்டு இரவும் பகலும் இதுவே பணியாக இருந்து வருகிறார். இவர் தேசிக வைபவமுமறியார், இதர ஆசாரியர்களின் ப்ரபாவமுமறியார். மருந்தில்லாத மஹாவ்யாதியென்று ப்ரஸித்தமான அஸூயையையே வடிவு கொண்டு ஜனித்ததென்னலாம்படியான அவர், ஒரு மஹான் செய்து போந்த தேசிக ப்ரபந்தவுரைப் பதிப்பில் தேசிக வைபவ மெழுதுவதாக வீணாகத்தாம் தலையிட்டு, அந்த மஹான் தமக்குக் கட்டளையிட்டதாக ஒரு பொய்யையுமெழுதி அபத்தக் களஞ்சியமாக ஒரு தேசிக சரித்திர மெழுதினார். அது, அன்றே காலே பிடிந்துத் தலையளவும் தகர்க்கப்பட்டொழிந்துங்கூட அதற்கு உயிரிருப்பதாக வைத்து மறுபதிப்புகளும் செய்து போருகிறார்.

அதில் ஸ்ரீ தேசிகாவதார காரணம் என்பது முதல் விஷயம். "பலர் பிராட்டியின் பெருமையை மறைத்து அவ்விஷயத்தில் பல தவறான ஸித்தாந்தங்களை ப்ரவசனம் செய்து வந்தனர். அவற்றைத் திருத்திப் பிராட்டியின் உண்மைப் பெருமையை உலகில் ஸ்தாபிக்க வேண்டியது அவசியமாயிற்று" என்று பாமர ப்ரதாரணமாக எழுதிவைத்தார். பிராட்டியின் பெருமையை மறைத்தவர்களென்று இவரால்கருதப் படுமவர்கள் எவ்விதமாயிருந்ததை எவ்விதமாக மறைத்தார்கள்? மறைத்தவர்கள் யாவர்? அவ்விஷயத்தில் தவறான ப்ரவசனம் செய்யப்பட்டதாக இவர் எழுதும் பல ஸித்தாந்தங்கள் எவை? அவற்றைத் திருத்தித் தேசிகர் உண்மைப் பெருமையை ஸ்தாபித்தவிதம் யாது? என்று கேட்டால் ஆகாசத்தை நோக்கி அழுவது தவிர வேறொன்றும் செய்யகில்லாரிவர். ஸமீபகாலத்தில் நாம் மதுராந்தகருடைய மாயவாக்குக்களை மாய்க்க வெளியிட்ட ஸம்ப்ரதாய ஸாம்ராஜ்யமென்கிற தென்மொழி நூலும், ஸப்தஸப்ததிஸதர்த்தமாலிகா என்கிற வடமொழி நூலும் நாற்றிசைகளிலும் வித்வான்களின் முடிமீது விளங்கி உண்மைப்பொருளை விளக்கியுள்ளபடியை அறியாதாரில்லை. * த்ருடபூர்வச்ருதோ மூர்க்க:* இத்யாதிகளான அஸ்தாநே அகாண்டே தூஷணங்களைக்கொண்ட திட்டுச்சுவடியானது "முன்னோர் மொழிந்த முறை தப்பாமற் கேட்டுப், பின்னோர்ந்து தாமதனைப் பேசாதே — தன்னெஞ்சில், தோற்றினதே சொல்லி யிது சுத்தவுபதேசவர வாற்றதென்பர் மூர்க்கராவார்" என்கிற ரத்னமான பாசுரத்தை அவதரிப்பித்து மாய்ந்தொழிந்ததென்பதை நாம் கண்ணாடிபோல் காட்டியிருப்பதை அறியாதாரொருவருமில்லை.

இதில் விரிவு வேண்டா; சதுச்ச்லோகியில் மூன்றாவது சுலோகத்தின் பாஷ்யத்தில் 'மோக்ஷப்ரதே பகவதி முமுக்ஷுணாம் கடகதயா ஏஷா திஷ்டதீதி ஸர்வஸம்மதம்" என்கிற வாக்கியமும், *அஸ்தி கர்மார்ஹ பலதே பத்யௌ க்ருத்யத்வயம் ச்ரிய: நிக்ரஹாத் வாரணம் காலே ஸந்துக்ஷணம் அநுக்ரஹே* என்கிற காரிகையும் வேதாந்தவாசிரியருடையது. நாம் ப்ரஸ்தாவித்துவரும் த்ருடபூர்வச்ருதனுக்கு ஸம்ஸ்க்ருத ஜ்ஞானமில்லாமையால் மேலே குறித்த ஸ்ரீஸூக்திகளின் ரஸமறிந்துகொள்ள சக்தியில்லையெனினும் ரஹஸ்யரத்னாவளியிலும் அதன் ஹ்ருதயத்திலும் வெள்ளைத்தமிழால் அவ்வாசிரியரே எழுதியிருப்பதைப் பலகால் எடுத்துக்காட்டியிருக்கிறோமே. அதுகொண்டு உண்மைதெளியவும் பாக்கியமில்லை. ஏன்? கேவலதுராக்ரஹம் மூளையை மூடிக்கொண்டிருப்பதனால்.

அடுத்த விஷயமென்னவென்னில்; ஸ்ரீபாஷ்யகாரர் மதத்தை அவலம்பித்த சிலரே அவர் அனுஷ்டித்துக்காட்டிய ப்ரபத்தி மார்க்கத்தை தூஷித்துவந்தார்கள்— என்பது அப்படி தூஷித்துவந்தவர்களை நிரஸிக்க தேசிகாவதாரமாம். இவ்வெழுத்து எங்ஙனே யுள்ளதென்னில். 'மஹர்ஷிகளை மாய்த்து ராவணகும்பகர்ணாதிகளை வாழ்விக்க ராமாவதாரம்' என்னுமாபோலேயிருந்தது. 'ஸ்ரீபாஷ்யகாரர்மதத்தை அவலம்பித்த சிலர்' என்பது தென்னாசார்ய ஸம்ப்ரதாயஸ்தர்களை யுத்தேசித்ததாகும். ஸ்ரீபாஷ்யகாரர் அனுஷ்டித்த ப்ரபத்திக்குப் பெருமதிப்பு கொடுப்பவர்கள் தென்னாசார்யர்கள் அதை அஸத்கல்பமாக்கினவர்கள் இந்த த்ருடபூர்வச்ருதவகுப்பினர் என்பதைப் பலகால் மிகவிரிவாக விளக்கியிருக்கிறோம். அது சிலாசாஸனமாகச் சிறந்து விளங்குகின்றது. இங்குச் சுருக்கமாகக் கேண்

மின். ஸ்ரீபாஷ்யகாரர் ஒரு பங்குனியுத்தரத் திருநாளிலே ஸ்ரீரங்கநாச்சியாரும் நம்பெருமாளுமான சேர்த்தியிலே சரணாகதிகத்யம் விஜ்ஞாபனம் செய்ததற்கு எதுபலனோ அதனை வேதாந்தவாசிரியர் நியாஸதிலகத்தில் * உக்த்யா தநஞ்ஜய விபீஷண லக்ஷ்யயா தே* என்னும் சுலோகத்தினால் நிஸ்ஸந்தேஹமாகவும் நிர்விவாதமாகவும் காட்டியுள்ளார். இந்த சுலோகத்தில் "லக்ஷ்மணமுநேர் பவதா விதீர்ணம் வரம் ச்ருத்வா" என்று ஸ்ரீரங்கநாதன் ஸ்ரீபாஷ்யகாரருக்கு ஒருவரம் கொடுத்தருளினதாக ஸ்பஷ்டமாய்க் கூறப்பட்டுள்ளது. அந்தவரம் எப்படிப்பட்டதென்பதை நாம் வேறொரு வியாக்கியானங்கொண்டு அறியவேண்டாதபடி ஆசிரியர்தாமே மூலத்திலேயே "ததநுபந்தமதாவலிப்தே மயி" என்பதனால் விளங்க வைத்தார். இதற்கு வியாக்கியானத்தையும் தேசிகஸம்ப்ரதாயஸ்தர்களென்று சொல்லிக்கொள்ளுமவர்கள்தாமே 56 வருடங்களுக்குமுன்பு திருக்குடந்தையில் அச்சிட்டிருக்கின்றார்கள்.

> "[ச்ருத்வா வரம்] ஸ்ரீமத்ராமாநுஜார்யாய கீத்ருச வரப்ரதாநமிதி சேத் இத்தம்;—போயதீந்த்ர! த்வயா வேதாந்த சாஸ்த்ர ரஹஸ்யபூதப்ரபத்தி சாஸ்த்ரார்த்தப்ரதிஷ்டாபநாத் ஹேதோ: மாம் அவிகலம் ப்ரபந்நஸ்ய தவ அபிமாநே ஸித்தாந்தே ச ஸாக்ஷாத் பரம்பரயா வா யேயே அந்தர்ப்பூதா: தே ஸர்வேபி தேஹாவஸாந ஏவ த்வத்ஸம்பந்திஸம்பந்தாத் மோக்ஷம் யாந்து இதி வரம் ஆப்தபரம்பரயா ச்ராவிதம் ச்ருத்வா."

என்கிறபங்க்திகள் அந்த வியாக்கியானத்திலுள்ளவை. இதன் பொருள்—'பாஷ்யகாரரே! நீர் அநுஷ்டித்த ப்ரபத்தியினாலேயே உம்முடைய அபிமானத்திலும் உமது ஸித்தாந்தத்திலும் ஸாக்ஷாத்தாகவோ பரம்பரையாகவோ அந்வயித்த யாவரும் தேஹாவஸானத்தில் முக்திபெறக்கடவர்களென்று தேவரீர் [ஸ்ரீரங்கநாதர்] கொடுத்தவரத்தை நான் ஆப்தமுகத்தாலே கேட்டேன் என்பதாம்.

மேலே விவரித்த வியாக்கியானத்தை நாங்கள் இசைகின்றிலோமென்று இதுகாறும் ஒருவரும் சொல்ல முன்வரவில்லை. திருக்குடந்தையில்வாழும் ப்ரபல பரமைகாந்திகள் பரிசோதித்துப் பதிப்பித்த வியாக்கியானமன்றோ இது. இது கிடக்கட்டும். மூலமான ஸ்ரீஸூக்தியே போதுமே. ஸ்ரீரங்கநாதனிடத்தில் ஸ்ரீபாஷ்யகாரர் பெற்ற வரம் யாது? என்று கேட்டால் பொருத்தமாக விடையளிக்க வேணுமே. "ததநுபந்தமதாவலிப்தே" என்று ஆசிரியர் தமக்கு இட்டுக்கொண்ட விசேஷணம் பழுதுபடாதபடியன்றோ வரஸ்வரூபத்தை நிஷ்கர்ஷிக்கவேணும். சரணாகதிகத்யத்தில் "அஸ்து தே; தயைவ ஸர்வம் ஸம்பத்ஸ்யதே" என்றவிடத்தில் ஸர்வசப்தாபிப்ரேதம் இன்னதென்று விளக்கியருளின ச்ருதப்ரகாசிகாபட்டருடைய ஸ்ரீஸூக்திக்கும் இணங்கப் பேசவேணும். *விநதவிவிதபூத வ்ராதரக்ஷைகதீக்ஷே* என்றவிடத்து ச்ருதப்ரகாசிகையையும் த்த்வடீகையையும் [ஸ்ரீராமாநுஜன் 233ல் பக்கம் 9 ல்] காட்டியிருக்கிறோம். அவற்றுக்கும் பொருந்தப்பேசுமளவில் ஸ்ரீபாஷ்யகாரருடைய ப்ரபத்திமார்க்கத்தை முள்ளடைத்துக் கெடுத்தவர்கள்—கெடுத்துக்கொண்டும் வருபவர்கள் இந்த த்ருடபூர்வ ச்ருதவகுப்பினரேயென்பது சிலாசாஸனமாகும். ஸாரசாஸ்த்ரமென்று இவர்கள் கொண்டாடுகிற ரஹஸ்யத்ரயஸாரத்தில் க்ருதக்ருத்யாதிகாரத்தில்—

"இவனுடைய இந்த க்ருதக்ருத்யத்வாநுஸந்தானத்தை *அதஸ் த்வம் தவ தத்வதோ மத் ஜ்ஞானதர்சநப்ராப்திஷு நிஸ்ஸம்சயஸ் ஸுக மாஸ்வ * என்று சரணாகதிகத்யத்திலே நிகமித்தருளினர்" என்றெழுதி உடனே "இதுக்குக் கருத்து" என்று பீடிகையிட்டு "அநாதிகாலம் ஆஜ்ஞாதி லங்கனமடியாகவுண்டான பகவந்நிக்ரஹத்தாலே ஸம்ஸரித்துப் போந்த நமக்கு அவஸர ப்ரதீக்ஷையான பகவத்க்ருபையடியாகவுண்டான ஸதா சார்யகடாக்ஷ விஷயீகாரத்தாலே வந்த த்வயோச்சாரண அநூச்சாரணத் தாலே ப்ரபத்த்யநுஷ்டானம் பிறந்தபின்பு சரண்யப்ரஸாதனங்களில் இதுக்குமேல் ஒன்றில்லாமையாலே நிக்ரஹ ஹேதுக்களையெல்லாம் க்ஷமித்துத் தீர்ந்த அடியவர் தம்மைத் திருத்திப் பணிகொள்ளவல்ல ஸர்வ சேஷியான ச்ரிய:பதி தன்பேருகத் தானே ரக்ஷிக்கு மென்று தேறி நிர்ப்பரனாயிரு என்கை."

என்று இக்காலத்தவர்களின் அத்ருஷ்டார்த்தானுஷ்டான ஸம்ப்ரமங்களை நெடுந் தூரத்திலே போக்கி – இங்ஙனே தமிழில் எழுதிவைத்ததை அப்படியப்படியே ஸம்ஸ்க்ருதத்திலு மெழுதிவைத்தார். எங்கே யென்னில் மேலே தாம் உதாஹரித்த சரணாகதிகத்யஸூக்தியின் பாஷ்யத்தில். அந்த வடமொழிவாக்கி யங்களாவன—

"ஏதேந அநாதிகாலம் ஆஜ்ஞாதிலங்கநமூல பகவதப்ரஸாதேந ஸம் ஸரதோ மே பகவத்க்ருபாமூல ஸதாசார்யாங்கீகாரேண த்வயோச் சாரணாநூச்சாரணபூர்வக ஸ்வரக்ஷாபரந்யாஸே ஸித்தே. ப்ரஸாதநேஷு அஸ்மாத் அப்யதிகஸ்ய அபாவாத் ஸ்வீக்ருதபர: ச்ரிய:பதிர் நாராயண: காலத்ரயவர்த்திநஸ் ஸர்வாந் அப்ரஸாதஹேதூந் யதார்ஹம் க்ஷாந் த்வா........"

இத்யாதி. ஆக இந்த உபயபாஷாவாக்ய ராசிகளில் எது முன்னே எழுதப் பட்டது எது பின்னே யெழுதப்பட்டது என்பதை ப்ராஜ்ஞர்கள் நிர்ணயித்துக் கொள்வது. எப்படி நிர்ணயித்தாலும் விவாதமில்லை. முந்துற எழுதினதைக் கையில் வைத்துக்கொண்டு அதற்கு நேர்மொழிபெயர்ப்பாகவே பிந்தினதை யெழுதிவைத்தாரென்பது பேர்க்கவும் பேராதது. நவீனர்கள் தேங்காயுடைத்து அனுஷ்டிக்குமது நவீனமே என்பது இவற்றால் தேங்காயுடைத்துக்காட்டப்பட்டது.

ரஹஸ்யத்ரயஸாரப்ரவசனம் பண்ணத்தொடங்கின இக்காலத்தவர்கள் இந்த கெட்டம் வரும்போது பங்க்தியை வாசிப்பதும் கனைப்பதும் தினமணி தினத் தந்தி ஸமாசாரங்களை ப்ரஸ்தாவித்து அந்யபரதையூட்டுவதும், "இங்கே அண்ணங்கராசாரியார் சிலவிமர்சங்கள் காட்டுகிறார்; அது ஒரு ப்ரகாரம்" என்று சொல்லிக்கொண்டே காலக்ஷேபஸமாபனம் பண்ணியெழுந்து விழத்தொடங்குவர் கள். சிலர் உக்திநிஷ்டை ஆசார்ய நிஷ்டை விவாதங்களைக்கிளப்பிக் காடுபாய்ந்து "ஸ்வாமி இன்று ஸாதிச்சானது ஆச்சர்யம் அத்யாச்சர்யம், சோனைமாரியாகச் சொரிஞ்சாச்சுது" என்று சிஷ்யர்கள் சொல்லும்படி செய்வது விலக்ஷணகாலக்ஷேப ப்ரக்ரியை. இவர்கள்செய்யும்ப்ரபத்திமார்க்க ஸம்ரக்ஷண வைகரியிருந்தபடி இது.

இனி அடுத்த விஷயம். "ஆருயிரப்படிக்குப் பின்தோன்றிய பலவியாக் கியானங்களிலுள்ள தோஷங்களைக் கணிசித்து அவற்றையெல்லாம் களைந்து தேசிகனருளிச்செய்த எழுபத்துநாலாயிரம் க்ரந்தங்கள்கொண்ட நிகமபரிமலமென்னும் ஓர் அழகிய வியாக்கியானம் ஸ்வாமியாலே தம் குமாரர்க்கு முன்பே கால க்ஷேபமாக ப்ரவசனம் செய்யப்புட்டிருந்தது." என்பது. இந்த நிகமபரிமலத்தைப் பற்றி ஒரு ரஸிகமணி எழுதியிருந்த கதையொன்று கேளீர். ஒரு தீர்க்கப்ரஹ்ம சாரி நெடுநாளாகத் தனக்கு விவாஹமாகாதிருந்த அவமானத்தைத் தீர்த்துக் கொள்ள வேண்டி உப்பிலியப்பன் கோவிலுக்குச் சென்று நாளது தைமீ 5வ தனக்கு விவாஹம் நடத்த நிச்சயித்திருப்பதாக ஒரு வந்த்யாஸுத புத்ரியின் பெயரைக் குறிப்பிட்டு சுப முஹூர்த்த பத்திரிகை யச்சிட்டு பந்துமித்ரர்களுக்கு அது தைமீ 6வக்குப் பிறகு சேரும்படியாக அனுப்பிவிட்டு அங்கு மிங்கும் சில நாள் திரிந்திருந்து பிறகு ஒரு நாளில் அந்தப் பெண் ஆசாரியன் திருவடி சார்ந் திட்டதாக அனைவர்க்கும் மரணக் கடிதங்களனுப்பிவிட்டு இருபது நாள் பொறுத்து வீடு வந்து சேர்ந்து 'ஐயோ அவளுடைய முகம் எவ்வளவு அழகு! தெரியுமா? கூந்தல் என்ன மநோஹரம் தெரியுமா? குரல் எவ்வளவு கம்பீரம் தெரியுமா? என்று பலபலவுஞ் சொல்லிப் புலம்பிப் புலம்பிப் புரண்டு புரண்டழுதுகிடந்தானும்.

நிகம பரிமலத்தை நினைத்துக் கொண்டு இவரும் இவருடைய ஸகாக்களும் 'அந்தோ! அநியாயமாய் அது லோபித்துவிட்டதே! அது எவ்வளவோ அழகா யிருத்ததென்று நடாதூரம்மாளுங்கூடக் கொண்டாடினாரமே' என்றழுதுபோரு வதற்கு, மேலேகுறித்த கதை தான் மிகப் பொருத்தமானது. திருவிந்தளூரென்னும் திருப்பதிக்குப் பரிமளரங்க க்ஷேத்ரமென்று பெயர். அவ்விடத் தெம்பெரு மான் திருநாமம் பரிமள ரங்நாதன் என்பதாம். வேதாமோத க்ஷேத்ர மென்றும் சொல்லுவர். நிகமபரிமலம் அவ்விடத்தில் தான் ஸ்வாமி தேசிகனால் இயற்றப் பட்டதென்றும் அதற்காகவே அந்த ஸன்னிதியில் தேசிக விக்ரஹம் அந்தர் பஹிச்ச ப்ரதிஷ்டாபிதமென்றும், அவ்விடத்து ஸ்தலாசார்ய புருஷர்களுக்குப் பணங்காசு கொடுத்து அந்த ஏடுகளை வாங்க முயல வேண்டுமென்றும் இப் போதைய கமிட்டிகளின் நிர்ணயமாம். அப்படியொருக்கால் அது கிடைத்தால், அது பெரியவாச்சான்பிள்ளையின் இருபத்து நாலாயிரப்படிக்கு வியாக்கியான மாகத்தானிருக்குமென்பதை த்ரமிடோபநிஷத்தாத்பர்ய ரத்னாவளீ ப்ரக்ரியை யைக் காண்பவர்கள் நிஸ்ஸந்தேஹமாக நிர்ணயிக்கலாம். அமலனாதிபிரான் வியாக்கியானமாக முனிவாஹனபோக மென்று ஒன்று காண்கிறதே, இதையே நிதர்சனமாகக் கொள்ளலாமே. சாரீரகமீமாம்ஸையில் முதலத்யாயத்தின் சரம ஸூத்ரம் தெரியுமன்றோ; *ஏதேந ஸர்வே வ்யாக்யாதா வ்யாக்யாதா: என்பது.

ப்ரஸ்துதம் இத்தகைய விஷயங்கள் ஸ்ரீ ஜீயர் ஸ்வாமி ஸன்னிதியில் விஜ்ஞாபிக்க அவகாச மேற்பட்டது. * பன்னியுரைக்குங்கால் பாரதமாம்* என்று பெரிய திருமடலில் ஸாதிக்கிறபடி பாரத ராமாயணாதிகளுக்கும் மேலாக விஜ்ஞா பிக்கவேண்டியவையுண்டு. ஆனால் எதுவும் அபூர்வமன்று. ஸ்வாமி யெம்பெரு மானார் ஸ்ரீ பாஷ்யத்தில் விரியவருளிச் செய்தவைகளை வேதாந்த தீபஸாரங்களில் சுருக்கியருளிச் செய்ததுபோல நூற்றுக்கணக்கான நூல்களில் அடியேன் விஸ்தரபீதியின்றிக்கே விளக்கின விஷயங்களின் ஸம்க்ஷேபவிந்யாஸமிது.

ஸ்ரீ:

# "யதார்த்தவாதீ பஹுஜனத்வேஷீ"

—ஆயினும் யதார்த்த முரைத்தேயாக வேண்டும்—

காஞ்சியில் தும்பைவன மென்கிற அக்ரஹாரம் அப்பயதீக்ஷிதரால் ப்ரதிஷ்டிதமானபின்பு அதற்குத் தோன்றிய தூப்பிலென்னும் வ்யவஹாரம் கி. பி. பதினேழாவது நூற்றாண்டுக்கு முன்பு இருந்ததில்லை. பிராமாணிகமான ஒரு புத்தகத்திலும் இது ஏறியிருக்கவுமில்லை. ஆழ்வார்கள் வழங்கினதும் தேசிகர் தாமும் ஆதரித்ததுமான தண்கா என்கிற சொல்லைத் தள்ளி தூப்பல்—தூப்பில்—தூப்புல் என்கிற கொச்சை நாமத்தைக் கொண்ட வசனங்களோ செய்யுள்களோ எதுவும் பதினேழாவது நூற்றாண்டிலும் அதற்குப் பிற்பட்ட காலத்திலுமே தோன்றியவை என்கிற தத்துவம் நவீனர்களின் நெஞ்சில் நன்கு பட்டிருந்தும் இதை நாடறியவொப்புக் கொண்டால் பெரிய சங்கடமாகுமென்று கொண்டு இசையவும் மாட்டாதே மறுக்கவும் மாட்டாதே திண்டாடி நிற்கிற நிலைமைக்கு ஆலத்தி வழிக்க வேண்டியிருக்கிறது.

நம்மாழ்வார்திருவாசிரியத்தில் முடிவு பாட்டில் * நளிர்மதிச்சடையனும் * என்றவிடத்து வியாக்கியானத்தில் பெரியவாச்சான்பிள்ளை-"தாழைமடலைக் கீறித் தலையிலே வைப்பாரைப் போலே குளிர்ந்த சந்த்ரனை ஜடையிலே தரித்த ருத்ரனும்" என்றருளிச் செய்கிறார். இந்த ஸ்ரீ ஸூக்தியின் தாத்பர்யத்தை நாம் **திவ்யார்த்ததீபிகையிலே விவரித்துள்ளோம்.** வியாக்கியான ஸ்ரீ ஸூக்தியின் உபக்ரமம்—"ஸாதகவேஷம் தோற்ற ஜடையைத் தரித்துக் கொண்டிருக்கச் செய்தேயும் துர்மானத்தாலே ஸுகப்ரதானனென்று தோற்றும்படி தாழை மடலைக் கீறித் தலையிலே வைப்பாரைப் போலே..." என்றுள்ளது. உலகில் இரவும் பகலும் மூட்டைகள் சுமந்து வருந்திக் கஷ்டஜீவனம் பண்ணுகிறவர்கள் தாங்கள் கஷ்டஜீவனம் பண்ணுகிறவர்களென்பது பிறர்க்குத் தெரியாமைக்காகவும் இவர்கள் சுகமாகவாழ்பவர்களென்று பலரும் நினைத்துக்கொள்வதற்காகவும் தாழம்பூ முதலிய பூக்களை யெடுத்துத் தலையிலே சூட்டிக்கொண்டு திரிவர்களாம். அப்படியே சிவபிரானும் தான் ஸம்ஹாரக் கடவுளென்பதையும் *வெந்தாரென்பும் சுடுநீறும் மெய்யில்பூசிக் கையகத்து ஓர் சந்தார் தலைகொண்டு உலகேழுந்திரிந்து வருந்துபவனென்பதையும் பிறரறிந்து அருவருக்காமைக்காகவும் 'இவர் உல்லாஸமாக விளங்கும் ரஸிகர்' என்று பலரும் நினைத்துக் கொள்வதற்காகவும் அழகிய சந்திரகலையைச் சிரமீது அணிந்தான் போலும்—என்பது பெரியவாச்சான்பிள்ளை திருவுள்ளம்.

அவ்வாறாக இவர்களும் வைதிகலௌகிகங்களில் பட்ட – பட்டுக்கொண்டிருக்கிற பங்கங்களையும் பரிபவங்களையும் மறைப்பதற்கும் பிறர் மறப்பதற்கும்

ஆடம்பர காரியங்களை அளவுமீறிச்செய்து வருகிறார்கள். இவற்றால் இவர்களின் பங்கங்களும் பரிபவங்களும் பதின்மடங்காக ப்ரகாசிக்குமேயல்லது வேறொன்றுமாகாது. பண்டொருகால் அபத்த – அஸம்பத்தச் சுவடிகளையெல்லாம் ஆனை தலையின்மேல் வைத்து ஊர்வலம் வந்தபோது உயிர்ப்பிச்சைபெறும் நிலைமை நேர்ந்ததும், சாமாஸாமியென்பவர் ரணரணகமெடுத்து மாண்டு போனதும் ஏடேறு பெருஞ்செல்வமாக இலங்குமவையன்றோ. அது இந்த நூற்றாண்டிலே யல்லது வேறொரு நூற்றாண்டிலன்று.

ஆசிரியருடைய அவதாரம் இன்னவருடத்திலென்று இன்னமும் நிர்ணயமாகாமல் விபவவருஷத்திலென்பாரும் சுக்லவருஷத்தில் தானென்பாருமாய்க் கிடப்பது சகமறிந்தது. காலஞ்சென்ற சேட்லூர் நரஸிம்ஹாசாரியார் வகுப்பினர் சுக்ல வருடமென்று பதிப்பித்திருப்பதை இக்காலத்தில் ஸ்ரீமதாண்டவன் முதலானோர் பிரசாரப்படுத்திவருகிறார்கள். தொடர்சங்கிலிகையான தொடர்பு இருந்தாலன்றோ உண்மையான விஷயங்களில் விவாதம் விளையாமலிருக்கும், இந்த ஸந்தர்ப்பத்தில் உலகம் கவனிக்கவேண்டிய பலவிஷயங்களைப் பகர்வோம்.

ஸ்ரீவைஷ்ணவதரிசனத்தில் ஆழ்வார்களுக்குப் பிறகு ஸ்ரீமந்நாதமுனிகள் ஆளவந்தார் பகவத்ராமாநுஜர் கூரத்தாழ்வான் பட்டர்போல்வாரான மஹாசார்யர்கள் கஜம் கஜமாகவும் சிங்கம் சிங்கமாகவும் தோன்றி விளங்குகின்றார்கள். இப்பேராசிரியர்களாலேயே நமது வைணவமதம் நிலைபெற்று விளங்குகின்றது. இவ்வாசிரியர்களுக்கு அந்நாள்தொடங்கியே ஆலயப்ரதிஷ்டைகள் ஏற்பட்டு மாச்சரியமேவடிவெடுத்த மற்றோர்கள் அங்குப் புகுரவொண்ணாதபடி சேமம் பெற்றிருக்கின்ற விஷயம் ஏழுலகுமறிந்ததன்றோ.

நம்மாழ்வார் ஓ ஓ! என்று கதறி "ஈன்றோளிருக்க மணைநீராட்டி" என்றருளிச்செய்ததைப் பின்பற்றித் திருமங்கையாழ்வார்

"இங்கோர் புதுத்தெய்வங் கொண்டாடுந் தொண்டீர்! பெற்ற
தாயிருக்க மணைவேந்நீராட்டுதிரோ மாட்டாததக வற்றீரே"

என்று திருவாய்மலர்ந்தருளினதற்கு இலக்காகி இக்காலத்தில் குத்ஸிதங்கள் செய்பவர்களை, நம்மாழ்வார் திருவாய்மொழியில் பொலிக பொலிக பதிகத்திலேயே உட்கண்ணால் கண்டு

"அரக்கரசுரர் பிறந்தீருள்ளீரேல் உய்யும் வகையில்லை தொண்டீர்!
ஊழிபெயர்த்திடுங்கொன்றே"

என்று கல்வெட்டாகக் கூறியிருந்தும் விளைவதறியாமல் துண்டுப் பிரசுரங்கள் வெளியிடும் முகத்தாலும் அரட்டைக் கூட்டங்கள் கூட்டும் முகத்தாலும் ஆஸுர க்ருத்யங்களைச் செய்ய முயன்றிருப்பதுபற்றி ஆஸ்திகர்களே! இராமானுசனடியார்களே! பொன்னடியாஞ் செங்கமலப்போதுகளைப் பணிந்து வாழ்பவர்களே! எள்ளளவும் அஞ்சாதீர்கள்.

"இதுகாறும் உறங்கிவிட்டதுபோல் இன்னமும் உறங்காமல்
புத்துணர்ச்சி பெற்று விழித்தெழுங்கள்"

என்றெழுப்பப்படுமவர்கள் இரவும் பகலு முறங்காதே கிடக்கட்டும். * உறங்குவான்போல் யோகு செய்யும் பெருமான் – நல்லார்கள் வாழும் நளிரரங்க நாகணையான் ஒரு கணப்பொழுதும் உறங்காது துன்பமிகு துயரகல அயர்வொன்றில்லாச் சுகம் வளர அகமகிழுந்தொண்டர்வாழ இன்பமிகு பெருங்குழுவைக் காத்தருளும் போது திருமால் தலைக்கொண்ட நங்கட்கு எங்கேவரும் தீவினையே என்று தெளிந்து வாழுங்கள்.

இவர்கள் கொண்டாடும் புதுத் தெய்வத்திற்கு ஓரிரண்டு நிமிடங்கள் நாமத்தை மாற்றினதற்கு பத்தன்று இருபதன்று ஐம்பதன்று நூறன்று ஐந்நூறன்று, ஆயிரம் ரூபா சொள சொள வென்று சொரிந்ததை இந்த நூற்றாண்டில் புதுப்பித்துக்கொள்ள வழிதேடுவது தவிர வேறில்லை. தேடட்டும். ஓடட்டும். ஆடட்டும், பாடட்டும். ஆடிப்பாடி ஆரவாரம் செய்யட்டும். நாடு அராஜகமன்று.

திருமலையில் திருவேங்கடமுடையானுடைய மஹாமண்டப முன்னணியில் இரண்டாயிரம் நாலாயிரம் வருடங்களுக்கு முன்பு நிருமித்தவை யென்று ஏழுலகு மறியநின்ற இரண்டு பெரிய திருமணிகள் பரமபதநாதன் திருமுகமண்டலத்திற் போல் விளங்குகின்ற புண்ட்ரஸந்நிவேசத்தைக் கண்ணாரக்கண்டுவைத்தும், நம்மாழ்வார் “கண்டுந் தெளியகில்லீர்” என்றருளிச்செய்ததையே நினைப்பூட்டி வருகின்ற ஆதர்காள்! ஒன்று கேண்மின். உளங்கொள் ஞானத்து வைம்மின். இலங்கையில் இனிது வாழ்ந்த இராவணன் அங்கேயே இனிதுகிடந்தானாகில் அவன் இற்றைக்கும் வாழலாமே. * என்னிலங்கு நாமத்தளவும் அரசென்றது அவனுக்கேயாகுமே. ம்ருத்யு பிடரி பிடித்துத்தள்ளத்தள்ளத் தானாகவேயன்றோ தண்டகாரணியம் புகுந்து, ரோயரோய மாரீசன் சொன்ன இதங்களையும் மதியாது மாண்டொழிந்தான். காதால் கேட்ட கதைகளையெல்லாம் கண்ணால் காணவன்றோ பாடுபடுவது! ஸாத்விக முறையை அறவே விட்டிட்டீர்களந்தோ!.

ஆதிசங்கராசாரிய ஸ்வாமிகளின் வாழ்நாள் அதிககாலமில்லை. அந்த மஹா புருஷர் வாழ்ந்தது அற்ப காலமே. அதனுள் அப் பெரியார் எவ்வளவு காரியங்கள் செய்தார். எவ்வளவு நூல்களை இயற்றினார்! அவருடைய பெருமைக் கடலில் திவலைகாணுமா ? இன்னமுங்கேளீர்,

பாம்பே மகா நகரத்தில் நிர்ணயஸாகரமுத்ராலயத்திலிருந்து காவ்யமாலா என்கிற ஸீரீஸ் ஏறக்குறைய 40 வருஷ காலம் வெளிவந்து கொண்டிருந்தது. அதில் அபூர்வமான ஆயிரக்கணக்கான காவியங்கள் வெளி வந்தன. ஒவ்வொன்றும் அற்புதம்! ஆச்சரியம்! என்னத் தக்கதே யொழிய ஸாமான்யமான காவியமன்று. ஒரு கவியே நூற்றுக்கணக்கான காவியங்கள் செய்திருக்கிறார். ஆங்காங்கு புஸ்தகபாண்டாரங்களில் அடுக்கி வைத்திருப்பன காணலாம். காவியங்கள் கிடக்கட்டும். கதாதரபட்டாசாரியர் என்கிற கௌடப்ராஹ்மணர் தர்க்க சாஸ்த்ரத்தைக் கரைகண்டு அதில் எத்தனை நூல்கள் எழுதியிருக்கிறார் தெரியுமா? அந்த சாஸ்த்ரத்தை அந்த பட்டாசாரியரே புதிதாகப் படைத்தாரென்னும்படியன்றோ வுள்ளது. கதாதரீயம் என்கிற அவருடைய க்ரந்தங்கள் பரவாத இட

முண்டோ நவத்வீபத்தினுள்ளும். இப்படியே வியாகரண மீமாம்ஸா சாஸ்த்ரங்களிலும் தேசிக காலத்திற்கு மிகப்பிற்பட்டவர்கள் எழுதிய ஸித்தாந்த கௌமுதீ பாட்டதீபிகை முதலான விலை யுயர்ந்த க்ரந்த ரத்னங்கள் உலகத்தில் எத்தனை த்வீபங்களில் எத்தனை மூலைமுடுக்குகளில் எத்தனை ஜாதியாரிடத்தில் பரவியிருக்கின்றன தெரியுமா! இவையும் நிற்க.

ஸமீப காலத்தில் மைஸூர் மாகாணத்தில் வாழ்ந்த மண்டயம் அனந்தாழ்வானென்கிற மஹா வித்வத்ஸார்வபௌமர் தோன்றி வேதாந்தவாதாவளிகள் பணித்திருப்பது பண்டித வுலகில் ப்ரஸித்தம். அந்த வாதாவளிகளில் ஒன்றுக்கு ஈடாவதுண்டோ? ரஹஸ்யார்த்த விஷயத்தில் நிஷ்க்ருஷ்டமான – ப்ராமாணிகமான தெள்ளறிவு இன்றிக்கே முன்பின் முரண்பாடு பலவுங் காணும்படியாகவும், * பஞ்சஸ்வேதேஷு பக்ஷேஷு கச்சிதேக: ப்ரமாணவாந் * என்றுப்போலே முடிவு காணவும் காட்டவும் மாட்டாதபடியும் மனம்போன போக்காக எழுதிவைப்பதில் அத்விதீயர் என்னத் தட்டில்லை. ச்ருதப்ரகாசிகா மஹார்ணவத்திலிருந்து கைப்பற்றின சில திவலைகளன்றோ இவரது நூல்களிற் காணுமவை. எந்த நூலில் என்ன அபூர்வார்த்தம்? என்று கேட்டால் கண் சிவக்குமத்தனையேயன்றோ.

எண்பது தொண்ணூறு வருடங்களுக்கு முன்புவாழ்ந்த அந்த மண்டயம் அனந்தாழ்வான் ஸ்வாமியின் பிரபாவமிருக்கட்டும். இந்த நூற்றுண்டில் ஐம்பது வருடங்களுக்கு முன்புவாழ்ந்த விச்வவிக்க்யாதயசஸ்கான ஸ்ரீமத் குன்றபாக்கம் சீமாச்சார் ஸ்வாமி யென்கிற மஹாபுருஷர் ஸ்ரீபாஷ்யம் முழுவதையும் ஸ்ரக்தரா வ்ருத்தத்தில் ச்லோக பத்தமாக்கியுள்ளார். தத்வரத்னவளியென்னுந் திருநாமமுடைய அந்த மஹாக்ரந்தத்தில் இரண்டாயிரம் சுலோகம் வரை தாமேயருளிய தத்வார்த்த சிந்தாமணியென்னும் வியாக்கியானத்தோடுங்கூட நாலைந்து பெரிய ஸம்புடங்கள் நன்கு அச்சிடப்பட்டு மிருக்கிறது. ஸ்ரீபாஷ்ய பங்க்திகளை அப்படியப்படியே சுலோகமாக்கியிருக்கிற வைகரி எந்த வித்வானுக்கும் நெஞ்சால் நினைக்கவுமரிது. இந்த ஸ்வாமி உபாஸனதிகள் பண்ணி ஞானம் பெற்றவரன்றிக்கே குருகுலக்லிஷ்டராய் விளங்கினவர். நாற்பதாண்டுகட்கு முன்பு திருப்பதியில் வாழ்ந்தவரும் வித்வச்சிஷ்யப்ருந்த வந்திதருமான ஸ்ரீமத் புரிசை ஸ்வாமி யருளிச்செய்த க்ரந்த ரத்னங்களோ நாற்றிசையிலும் படன பாடனதிகளில் விளங்கிவருமவை.

இதுவும் நிற்க. இக்காலத்தில் ஏழெட்டு பாஷைகளில் வல்லவர்களாய் அந்த பாஷைகளிலெல்லாம் உயரிய நூல்களை யெழுதி உலகுக்கு உத்தமோத்தமமான உபகாரங்கள் செய்துவரும் உத்தமர்கள் எத்தனைவரில்லை. ஆனால் அவற்றில் பூர்வோத்தரவிரோதங்களும் நிந்தாபரிஹாஸங்களும் இல்லையே யென்று குறை கூறலாம். அஃது உண்மையே. நான்கு வேதங்களுக்கும் விரிவானபாஷ்யங்களியற்றிய வித்யாரண்ய ப்ரப்ருதிகளையும் நினைத்துப்பார்க்க.

யதிராஜ ஸப்ததியில் ஸ்வாமி தேசிகன் "குலகிரிதுலாரோஹே பாவீ கியாநிவ கௌஸ்துப:" என்றொரு ஸூக்தி ஸாதிக்கிறார். விஷய மென்னவென்றால், புற மதங்களில் நூற்றுக்கணக்கான நூல்கள் தோன்றியிருப்பதாகவும், ஸ்வாமி

யெம்பெருமானுர் ஸ்ரீ பாஷ்யாதி ஸ்வல்ப க்ரந்தங்களே ஸாதித்திருப்பதாகவும் காட்டி எதிரிகள் நம்மைப் பரிஹஸிப்பதாக வைத்து அதற்கு ஸமாதானம் கூறுகிற சுலோகமிது. [விகடமுரபித் வக்ஷ:பீட பரிஷ்கரஞேசித: குலகிரிதுலாரோஹே பாவீ கியாநிவ கௌஸ்துப:] என்கிருர். திராசில் ஒரு தட்டில் குலபர்வதங்களே யும், மற்ரெரு தட்டில் கௌஸ்துபமணியையும் வைத்து நிறுத்தால் எடையில் குல பர்வதங்களிருக்கும் தட்டு மிகக் கனத்துத்தானிருக்கும் கௌஸ்துபமணித்தட்டு லேசாகத்தானிருக்கும். கௌஸ்துபமோ எம்பெருமானுடைய திருமார்புக்கு அணி செய்வது. அத்தகைய பெருமை பெற்ற கௌஸ்துபரத்னம் குலபர்வதங்களே விட லேசாக இருந்ததஞல் என்ன ஹாநி? இது ரத்னம்; அவை பரற்கள் – என்ரு ராயிற்று. இந்தத்ருஷ்டாந்தம் உண்மையில் மிகப்பொருத்தமரனது. 'எண்ணிக்கை யற்ற க்ரந்தங்களே இயற்றியவர்' என்று விஷயமறியாதவர்களால் வ்ருதா அபி மானிக்கப் பெற்றவருடைய சுவடிகளேயெல்லாம் ஒரு தட்டில் வைப்பது, ஆசார்ய ஹ்ருதயத்தை மட்டும் (அல்லது) தத்வத்ரய வியாக்கியானத்தை மட்டும் (அன்றி) திருவாய்மொழி நூற்றந்தாதியை மட்டும் (அல்லது) * முன்ஞேர்மொழிந்த பாசுர மொன்றைமட்டும் ஒரு தட்டில் வைப்பது; அப்போது தெரியுமே எண்ணிறந்த சுவடிகளின் ஏற்றம், ஆமாம்; அந்தத் திராசுதட்டு ஏறியே யிருக்கும்.

முக்கியமாக ஒன்று கேளீர். இந்த நவீன வகுப்பினர்களுக்கு அஸ்தாநே அகாண்டே பக்தி ஏற்பட்டதன் பயன் உலகம் போற்றும் பூர்வாசார்யர்கள் திறத் திலே பகை பெருகும்படியாயிற்று. இதில் பண்டிதன் மூர்க்கன் என்கிற வாசியே கிடையாது. எடுத்துக் காட்டுவதைக் கவனியுங்கள். எம்பெருமானுர் ஸாதித்த சரணுகதிகத்யத்திற்கு ஏற்கெனவே ச்ருதப்ரகாசிகாபட்டர் ஒரு வியாக்கியான மருளிச் செய்திருந்தார். பிறகு நிகமாந்த மஹாகுருவும் ஒரு வியாக்கியான மிட்டார். ஏற்கெனவே ஒரு வியாக்கியான மிருக்க வேறு வியாக்கியான மெதற் காக? என்று கேட்டுக் கொண்டு (காலஞ் சென்ற) சேட்லூர் நரஸிம்ஹாசாரியர் காரணமெழுதி யச்சிட்டு வெளியிட்டிருக்கிருர்––"ச்ருத ப்ரகாசிகா பட்டர் வாத்ஸல்ய மென்பதற்கு தோஷ போக்யத்வ மென்று அஸம்ப்ரதாயமான அர்த்த த்தை யெழுதி விட்டார்; அதை நிரஸிப்பதற்காகவே ஸ்வாமி தேசிகன் வேறு வியாக்கியான மருளும்படியாயிற்று'' என்று. இது நாம் ஆரோபிப்பதா? உள்ளபடி காட்டுவதா வென்று கண்ணுடையீர்! கண்டு கொண்மின். ச்ருதப்ரகாசிகா பட்டர் ஸாதித்த பொருள் அஸம்ப்ரதாய மென்கைக்கு இந்த சங்கிடுகுட்டையா அதிகாரி? லக்ஷ்மீ ஸஹஸ்ர வ்யாக்க்யாதா ஸ்ரீ பராசர பட்டர் பிராட்டியை ஜீவ கோடியில் சேர்த்துவிட்டார்'' என்று அழுவதைப் பலகால் எடுத்துக் காட்டியிருக் கிறேன். புதுத் தெய்வங் கொண்டரடுமித் தொண்டர்களின் பகை லோகாசார் யாதிகளில் மட்டும் விச்ரமியாதே ஸ்ரீ பராசரபட்ட ஸ்ரீ ஸுதர்சன பட்ட ப்ரப்ருதி மஹாசார்யர்களிடத்திலும் பெருகுவதை ஸ்ரீ வைஷ்ணவ வுலகம் காணவேணும்.

ஒரு ஆசார்ய ஸம்பந்தமும் இல்லாமலிருந்த இவர்கள் நவீன காலத்தில் ஒருவரை ஆசார்யராகப் பிடிப்பதும், அவருடைய சொத்தல் புழுத்தல்களே யெல்

லாம் பரம போக்யமாகக் கொள்வதும், அவருடைய பேச்சுக்களுக்கும் இணங்காத கொள்கைகளைத் தாம் கொள்வதுமாகியவற்றைக் காணுங்கால் "இவை யென்ன விடமங்களே—இவையென்ன மயக்குக்களே—இவையென்ன சுண்டாயங்களே!- இவையென்ன வியற்கைகளே!" என்கிற திருவாய்மொழிப் பாசுரங்கள் தவிர வேறெதுவும் நினைவுக்கு வருவதில்லை.

திருவாய்மொழியென்றுகூட வழங்கத்தெரியாமல் திருவாமொழி திருவாமொழியென்றே பேசியு மேசியும்போந்தவர்கள் திருவாருயிரப்படியென்பதும் நிகமபரிமலம் சாச்சாச்சுது என்பதும் ஒரு அதிசயமான விஷயமே யென்னத்தட்டில்லை. அஹோபிலமடத்து ஆஸ்தானவித்வானென்று சொல்லும் ஸ்ரீ உ.வே. திருக்கள்ளமையங்கார் ஸ்ரீமதுபயவே. வித்வான், காரப்பங்காடு வேங்கடாசார்ய ஸ்வாமியின் ஷஷ்ட்யப்த பூர்த்திநினைவு மலர்க்கு எழுதிக்கொடுத்துப் பிரசுரமாகியுள்ள கட்டுரையில் காணப்படுவது—

> "தேசிகன் நிகமபரிமலமென்று மிக விரிவான வியாக்கியானம் அருளிச்செய்தாரென்றும் அது லுப்தமாய் விட்டதென்றும் சிலர் சொல்லுகிறார்கள். தேசிகனிடத்தில் ஸ்ரீவைஷ்ணவர்கள்சென்று எல்லாகிரந்தங்களுக்கும் அத்யத்புதங்களான வியாக்கியானங்களை இயற்றுகின்ற தேவரீர் திவ்யப்ரபந்தங்களுக்கும் ஒரு அத்புதமான வியாக்கியானம் இயற்ற வேணுமென்று பிரார்த்தித்ததாகவும், அதற்கு தேசிகன் 'சோழியன் யாவற்றையும் சுவைத்துவிட்டான், நமக்கு சக்கையேகாணுமுள்ளது' என்றருளிச்செய்ததாகவும் சிலர் சொல்லுகிறார்கள். இங்கு சோழியனென்பதால் பெரியவாச்சான் பிள்ளையைக் குறிப்பிட்டாரென்று கொள்க. பரமகாருணிகரான பெரியவாச்சான்பிள்ளை நாலாயிர திவ்ய ப்ரபந்தத்திற்கும் வெகு அழகான மதுரமான கம்பீரமான வியாக்கியானத்தை அருளிச்செய்திருக்கிறபடியினாலே நாம் உரை இயற்றவேண்டிய அவசியமில்லையென்று ஸாதித்தார் என்பதே அவ்வாக்யத்தின் கருத்து."

என்பதாக. ஆரியர்காள்! நிகமபரிமலம் லோபித்துவிட்டதென்று விக்கி விக்கியழுவாரும், அது பரிமளரங்கன்ஸன்னிதியிலுள்ள தென்பாரும், அது ஜனிக்கவேயில்லை யென்பாரும் மற்றும் பலபலவும் சொல்வாருமான நவீன கோஷ்டியிலே அஸம்பாவிதமான பேச்சு எதுவுமில்லை.

உபஸம்ஹாரம். பன்னிரண்டு துறைகளில் நாம் எழுதிவரும் நூல்களில் பரபக்ஷ ப்ரதிக்ஷேப மென்னும் துறையில் மட்டும் நூறுக்கு மேற்பட்ட நூல்களையெழுதி வெளியிட்டிருக்கிறோம். அவற்றில் இந்த நவீனர்கள் விடையிறுத்தே தீரவேண்டிய வினாக்கள் நூற்றுக்கணக்காகவுள்ளன. இதுகாறும் ஒன்றுக்கும் வாய்திறந்திலர். இப்போது அபூர்வமாக வொன்று ப்ரஸ்தாவிக்கிறோம். இஃதொன்றுக்கு விடையிறுத்து விட்டார்களாகில் எல்லாவற்றுக்கும் விடையிறுத்ததாகக்கொண்டு தொழுதேத்துவோம். நம்பிள்ளை பிள்ளைலோகாசார்ய ப்ரப்ருதிகளின் திவ்யக்ரந்தங்களில் அருமையான சில உபமானவாக்யங்களுண்டு.

அவற்றைக் கண்ட வாசிரியர் அந்தவாக்யங்களைத் தாமும் ப்ரயோகிக்க ஆசைப் படுகிறார். மருமமறியாமல் சில ப்ரயோகங்கள் பண்ணுவது சோசநீய மாகிறது, "காலன்கொண்டு மோதிரமிடு மோபாதி" என்பதொரு உபமானவாக்கியம். இது ஸ்ரீ வசனபூஷணத்திலுமுள்ளது. இதன் கருத்து என்னவென்றால், ம்ருத்யுபீடா பரிஹாரார்த்தமாக ஒருவன் மஹிஷதானம் பண்ணுகிறான். அதை வாங்கிக் கொண்டவன் அதை ஒருவாறு பரிஹரித்து விடாதே அதைவிற்று அந்தப் பொருளைக்கொண்டு மோதிரம் பண்ணுவித்துப் பூண்டானும். குண்டல மேகலாதிகள் செய்வித்துப் பூண்டானாகில் அவை தன் கண்ணுக்குப் புலப்படுவது கதாசித்தாகும். இந்த அவிவேகி மோதிரம் பண்ணிப் பூண்டானுகையாலே இது அடிக்கடி கண்ணில்பட்டு தனக்கே வெருவும்படியாயிருக்கும். இந்த த்ருஷ்டாந்தத்திற்கு இதுவே சுவைமிக்க கருத்து. இதையறிய விரகில்லையாயிற்று. ரஹஸ்யத்ரய ஸாரத்தில் சிஷ்யக்ருத்யாதி காரத்தில் "முறையொழியக் கேட்டுச் சொல்லுமாகில் காலன்கொண்டு ஆபரணம் பூண்டாற் போலே கண்டா ரெல்லாரும் தன்னை அருவருக்கும்படியாம்" என்றெழுதுகிறார். இதன்கீழே "களவுகொண்டு ஆபரணம் பூண்டாற்போலே கண்டார்க்கெல்லாம் தான் அஞ்சவேண்டும்படியாம்" என்றார். அது ஒக்கும். மோதிர மென்கிற விசேஷ நிர்தேசத்தின் சுவடறியாதே ஆபரணம் பூண்டாற்போலே யென்று பொதுப்படச் சொன்னார். அஸ்து. அதனால் கண்டா ரெல்லாரும் தன்னையருவருக்க என்னப்ரஸக்தி? இங்கு சேட்லூர் நரஸிம்ஹாசாரியர் எழுதுகிறார் - "காலன்கொண்டு – காலபுருஷ தானம்வாங்கி. அதாவது ஒருவனுக்கு ஆயுஸ்ஸுக்குப் பீடைவருமாகில் எள்ளினால் புருஷன்போல் ஒருபையால் செய்து அனேகம்விதமான ஆபரணாதிகளை அதற்குள் வைத்து தக்ஷிணையுடன் தானம் கொடுப்பது." என்று. ஐயோ! இதற்கு ஏதாவது அர்த்தமுண்டா? இஞ்சிமேட்டழகியசிங்கர் இப்படி அஸப்யமாக உரை செய்திலர். ஆனால் மூலத்தைப் பொருந்தவைத்துக் காட்டவில்லை. காட்டவல்லாருளரோ? ... (*)

## திருக்கச்சிநம்பிகள் ஆறு வார்த்தை போலே இவ்வாறு வார்த்தைகள் ஸகல லோக ஜீவாதுக்கள்.

1. முதல்வார்த்தை. எழுநூறாண்டு விழா கொண்டாடுமவர்களை நோக்கி அறு நூறாண்டு விழா கொண்டாடினதுண்டோ? என்று கேட்பார்க்கு என்ன விடை வெளிவருகிறதென்றால், அப்போது பாத்திர வியாஜ்ஜியங்கள் பிரபலப்பட்டு அபராதங்களும் தண்டனைகளும் நேர்ந்துகொண்டிருந்தபடியால் திண்டாட்டத்திற்கு அவகாசமிருந்ததே யொழியக் கொண்டாட்டத்திற்கு அவகாசமிருந்ததில்லை –என்பதாம்.

2. இரண்டாம் வார்த்தை. தேசிக ஹ்ருதயம் என்கிற நமது நூல் உலகம் பரவியுள்ளது, அதில், நவீனர்களுக்கும் தேசிக ஸூக்திகளுக்கும் ஒரு விதமான ஸம்பந்தமுமில்லை யென்று மூதலிக்கப்பட்டுள்ளது. அது அந்த ஒரு நூலில் மட்டு

மன்று. "குரௌ வாதிஹம்ஸாம்புதாசார்ய சிஷ்யே" என்று இவர்கள் அவிவேகத்தாலே கோஷிக்கும் சுலோகத்திற்கு விரிவான வியாக்கியானமிட்டிருக்கிறோம். அது நம்முடைய உபந்யாஸ சதத்வயத்தில் 180 முதலாக 192 அளவான உபந்யாஸங்களாக ஸ்ரீராமாநுஜன் 208ல் வெளிவந்திருக்கின்றது. அதை தினப்படி ஒரு முறை வாசித்து வருவதாகப் பல பெரியார்கள் தெரிவித்து வருகிறார்கள்.

3. மூன்றாம்வார்த்தை. ஸ்ரீ ராமாயணத்தில் * சதுர்தசஸஹஸ்ராணி ரக்ஷஸாம் பீமகர்மணாம், ஏகச்ச ராமோ தர்மாத்மா கதம் யுத்தம் பவிஷ்யதி.* என்றுள்ள ச்லோகத்தை ஸாத்விகர் பலர் நினைத்து வயிறுபிடிக்கிறார்களாம். முராரி மஹாகவி அநர்க்க ராகவத்தில் *யாந்தி ந்யாயப்ரவ்ருத்தஸ்ய திர்யஞ்சோபி ஸஹாயதாம், அபந்தாநம் து கச்சந்தம் ஸோதரோபி விமுஞ்சதி * என்றிட்ட ச்லோகரத்னத்தை யறியும் மஹான்கள் மார்பிலே கைவைத்துறங்கலாம். இங்கு யுத்த ப்ரஸக்தியுமில்லை.

4. நான்காம்வார்த்தை. பெரிய திருமொழியில் (5—8—7) பாட்டின் வியாக்கியானத்தில் பெரியவாச்சான்பிள்ளை யருளிச்செய்வது,—"முற்பட த்வயத்தைக் கேட்டு இதிஹாஸபுராணங்களையும் அதிகரித்து, பரபக்ஷப்ரதிக்ஷேபத்துக்குடலாக ந்யாயமீமாம்ஸைகளும் அதிகரித்து போதுபோக்கும் அருளிச்செயலிலேயாம் நம்பிள்ளையைப்போலே" என்று. இவ்வதிசயம் நம்பிள்ளைக்கு மட்டுமன்று; அவருடைய பரம்பரையில்வந்த மணவாளமாமுனிகள் பர்யந்தரான ஆசாரியர்களனைவர்க்குமொக்கும். இவர்களுடைய திவ்யஸூக்திகளின்முன்னே தர்க்கபாண்டித்யத்தாலே நினைத்ததெல்லாம் ஸாதிக்கவல்லோமென்பாருடைய வாக்ஜாலங்களெல்லாம் பகல்விளக்கும் மின்மினியுமாயிருக்குமத்தனை.

5. ஐந்தாம்வார்த்தை. ஸங்கல்பஸூர்யோதயத்தில் * உத்ப்ரேக்ஷ்யதே புதஜநைருபபத்திபூம்நா—கண்டா ஹரேஸ் ஸமஜநிஷ்ட யதாத்மநேதி* என்று உத்ப்ரேக்ஷா சப்தத்தையிட்டுத் தாமே சொன்னார். உண்மையான செய்தியை உத்ப்ரேக்ஷையென்று படிப்புள்ளவர்கள் சொல்லார்கள். 'ஸங்கீர்த்யதே' என்று சொல்லியிருக்கலாமே. இதுகிடக்க. மற்றொருவர் *வேங்கடேசாவதாரோயம் தத்கண்டாம்ச: அதவா பவேத், யதீந்த்ராம் சோதவேத்யேவம் விதர்க்யாய* என்றார். விதர்க்கடோலையிலிருப்பதற்கு ஹாஹா! என்ன ஆடம்பரம்! என்ன ஆரவாரம்!

6. ஆறுவதுவார்த்தை உலகில் நடைபெறும் நிகழ்ச்சிகள் விசித்திரமானவை. நம்முடைய பாக்கியத்தை நாம் சிந்தித்து மகிழ்ந்து உய்வோம். நாம் க்ரிமிகீடபதங்காதிகளாகப் பிறந்திலோம். மநுஷ்யஜாதியிற்பிறந்தும் அதிலும் எம்பெருமானார் தரிசனத்தில் ஜனித்தும், பேறுகளில் தலையான பேறாக * அல்லும் பகலு மனுபவிப்பார்தங்களுக்குச் சொல்லும் பொருளும் தொகுத்துரைத்த நல்ல மணவாளமாமுனிவன் மலரடிக்கீழ் வாழ்வதும், அவருடைய தேனும்பாலுங் கன்னலுமமுது மொத்த திவ்யஸூக்திகளை யனுபவிக்கப் பெறுவதும் ஸகலஸம்பதாம் ஸமாஹார: என்று களிப்போமாக. ... ... ... (*)

———